# தாஜ்மகாலும் ரொட்டித் துண்டும்






நா.காமராசன்

# தாஜ்மகாலும் ரொட்டித்துண்டும்

காவிய அரும்புகள்

நா. காமராசன்




புத்தக வெளியீட்டாளர்
81, பாண்டிபஜார்
சென்னை - 600 017

First Edition : August '77


**'TAJMAHALUM ROTTITHUNDUM'**

A Collection of Vers Libre

**By NAA. KAMARASAN**



**Price : Rs. 3-50**

**NARMADHA PATHIPPAGAM**
81, Pondy Bazaar,
MADRAS-600 017.

Printers :
THE IDEAL PRINTERS,
Madras - 600006.

## காணிக்கை

தாஜ்மகாலுக்கு அல்ல...
ரொட்டித் துண்டுக்கு மட்டும்!

# நான் விமர்சனம் செய்கிறேன்

நானொரு விமர்சகன் அல்ல! மாந்தோப்புகளும், நெல் வயல்களும், குறும்புத்தனமான பெண் பிள்ளைகளும், சுய மரியாதை இயக்கத்தின் இலட்சிய வீரர்களும், அறிவு ஜீவிகளான கம்யூனிஸ்டுகளும் நிறைந்த எங்கள் ஊரில்... என்றோ ஒருநாள்...ஒரு நாடகத்திற்குப் பாடல்கள் எழுது வதற்காக, வெண்டைக்காய்ப் பிஞ்சுகளில் உப்புத்தூள் வைத்துத் தின்றபடி, எங்கள் தோட்டக் கிணற்றின் குளு குளுப்பான 'கமலை'க் கல்லை மெழுகிக் கொண்டிருந்த பூவரச மர நிழலில் ஒரு கவிஞனைப் பேனா பிடித்தவன் நான். நானும் ஒரு படைப்பாளி என்கிற கர்வத்தில் மனசிற் குள்ளேயே இலக்கிய ரசனைகளைச் சிறை வைத்து விட்ட சுயநல வெறிபிடித்த எந்திரமாக நான் என்றும் இருந்த தில்லை.

எனது பால்ய காலத்தில்...ஞாயிற்றுக்கிழமைகளில் ஊர்ச்சாவடி அரச மரத்தின் தித்திப்பான கனிகளைச் சுவைத்துக்கொண்டு, நான் வாசக சாலைகளில் கழித்த

நேரங்களைப் பற்றிய பொன்கனவுகளை இன்றைக்கு நினைத்துக்கொண்டாலும் எனக்குத் தூக்கம் பிடிப்பதில்லை, இரவுக்கு முடிவுவரை எழுதும் விடியல்நேரக் குளிர்காற்றில் ''வால்ட்விட்மனின்'' - கவிதைகளை மனமுருகி வாய்விட்டு ஒரு வீரசைவன் வேதங்கற்பதுபோல், நானே ஆசானுகவும், நானே மாணவனுகவும் இருந்து கொண்டு படித்திருக்கிறேன்.

ஓ...சிந்தனைக்கு வர்ணம் பூசுகிற காலத்தின் நிதான கதியிலும் எனக்குள் நானே எப்படியெல்லாம் மாறி வந்திருக்கிறேன்.

சரித்திரம் மகத்தானது. அது சூரிய சந்திரரும், பருவ காலங்களும், ஜனன மரணங்களும் பவனி வருகிற ''வாழ்க்கை'' என்கிற யாத்திரைப் பாதையை நிகழ்ச்சிகளின் சின்னஞ்சிறிய ஊர்வல வீதியாக மாற்றி விடுகிறது. சரித்திரம் என்னையும் மாற்றி இருக்கிறது. என்னை அது இலக்கியப் பூர்வமாகப் பாதித்திருக்கிறது. புதுமை இலக்கியப் போக்குகளை நிர்மாணித்த பேனு மன்னர்களாகச் சிலரை என் மனம் கௌரவப்படுத்துகிறது!

ஓடையிலே நீரருந்தும் போது செத்துப்போன கலீல் ஜிப்ரானின் 'மராத்தா' எனது மானசீகத்தில் தாகங்களற்ற சௌந்தர்ய தேவதையாய் பவனி வருகிருள். தகழியின் 'கறுத்தம்மை'க்காக, நெஞ்சையே உடைத்தெறிகிற அவளுடைய காதல் சோகத்திற்காக, காற்றில் ஆடும் தென்னஞ் சிறகுகளோடு, நானும் மௌனமாக அழுதிருக்கிறேன். கிராமத்துச் சாலைகளை நான் தரிசிக்கிறபோதெல்லாம், சரத் சந்திரரின் 'தேவதாஸ்' என் நினைவிற்கு வருகிருன். ''துர்க்காபுரத்திற்கு இன்னும் எத்தனை மைல்?'' என்று வண்டியோட்டியிடம் கேட்டுக் கொண்டே அவன் இருமும் குரல் காதில் விழுகிறது, அசையும் மரக்கிளைகளைப் பார்க்கிற போதெல்லாம், ''பாரு...பாரு...'' என்று தனது தேவ வார்த்தையை உச்சரித்துக் கொண்டே தேவதாஸ், அவ

னுடைய பார்வதிக்காகக் கதறிக் கதறி அழுவதைப் போலி ருக்கிறது. பறத்தலின் துடிப்போடு புல்வெளியில் அமர்ந் திருக்கும் வண்ணத்துப் பூச்சியைப் போல, எல்லோரிடமும் பிரிவுக்காகவே உறவு கொண்ட, இரக்கத்துக்குரிய டால்ஸ் டாயின் 'அன்னு'வை என்னுலே மறக்க முடியவில்லை.

எனது முன்னேடிகளில் ''பாரதி'' என்கிற கவிஞனும், ''புதுமைப்பித்தன்'' என்கிற கதாசிரியனும் என்னைக் கவர் கிறர்கள். எனது வாழ்காலத்தில் உருவான படைப்புகளில் ஜெயகாந்தனின் கதைகளும், கண்ணதாசனின் உரை நடையும், லா.ச.ராவின் சொற்கோலங்களின் கவித்துவமும் என்னில் ஆழமான பாதிப்பை ஏற்படுத்துகின்றன.

அத்தி பூத்தாற்போல் எழுதும் கி. ராஜநாராயணன் எனது செல்ல எழுத்தாளர்.

நாடோடிப் பாடல்களும், பைபிளும், ஆண்டாளின் காதல் கனவுக் கவிதைகளும், கவிதைகளின் அருவியாக ஓடும் நாலாயிர திவ்யப்பிரபந்தங்களின் வார்த்தை சுகமும், எனது மனேராஜ்யத்தின் கனவுப் பறவைகள்.

கால ஓட்டத்தில் என் ரசனைகளே என்னை ஒரு கவிஞனய் மாற்றின. இங்கே அனைவராலும் ஒதுக்கப்பட்ட அனை வரையும் நான் பாடுகிறேன். என் முதல் கவிதையைக் கேட்டபோது ''ஒரு கவிஞனைக் கண்டெடுத்தேன்'' என்று பாராட்டியவர் உவமைக் கவிஞர் சுரதா. எனது சோதனை முயற்சிகளால் உலகத்தின் மனித சமூக அமைப்பில் தமிழ்க் கவிதைக்கு ஒரு மரியாதையை உருவாக்க விரும்பு கிறேன். ''தாஜ்மகாலும் ரொட்டித்துண்டும்''—இதில் காவிய அரும்புகளும், கவிதைகளும் இடம் பெற்றிருக் கின்றன.

தமிழ்க்கவிகள் அனைவரும் ஒரே வழியில் நடக்கும் மந்தைச் சொற்களின் மேய்ப்பாளர்களாய் மாறிவிடாமல், பல்வேறு விதமான சிந்தனைப் போக்குகளோடு (School of

Thoughts) எழுதவேண்டும். வேறு மொழிகளில் ஒரே கால கட்டத்தில் பல கவிஞர்கள் தனித்தன்மையோடு எழுதினார்கள்.

ஆனால் இங்கே பாரதிக்குப் பிறகு அவரைப் போலவே எழுதும் நடைமுறைக்கு நாம் நூற்றாண்டு விழாக் கொண்டாடத் துடித்தோம். இப்படியே ஒவ்வொரு மகாகவியின் காலத்திலும் இங்கே ஆயிரக்கணக்கான ''நகல்கவிகள்'' பிறந்தார்கள்.

பொங்கல், தீபாவளியைப்பற்றி 1500 பாட்டுக்குமேல் கும்மியடிக்கும் ஒரே பாணியில் கவிதை எழுதியவர்கள்தான் இங்கே ஏராளம்.

இனிமேல் இந்த நந்தவனத்தில் ஒரே மலர்கள் பல செடிகளில் பூக்காத வசந்தங்கள் வரவேண்டும். அதே வசந்தத்தில் தாமரை, மல்லிகை, ரோஜா என்று தனித்தன்மையுள்ள ஆயிரம் மலர்கள் இங்கே மலர வேண்டும். இதுவே தற்காலக் கவிதைகளைப் பற்றிய என் விமர்சனம். நூலை வெளியிட்ட நர்மதா பதிப்பகத்தார்க்கு என் நன்றி. எனது எழுத்து மலர்களைச் சேகரித்து இலக்கிய மாலையாக்க இரவைப் பகலாக்கிய என் ஆருயிர் விவேகானந்தனுக்கு என் இதய அன்பு என்றும் உரியது. இனிமேல் இந்த நூலை நீங்கள் விமர்சிக்கலாம்.

20-8-77<br>சென்னை

அன்புள்ள,

நா. காமராசன்

# பொருளடக்கம்

## லம்பாடிகள்

எங்கேயோ ஒரு மாந்தோப்பில்
என் கனவு நிழல்களிலே...
நான்...லம்பாடிக் கூட்டத்தில்
ரகசியமாய்த் தூங்குகிறேன்!
காற்றுடி சுழல்கிறது—தோப்புக்
காற்று சுகம் அழைக்கிறது.
நாற்காலி மேலே
நான் அமரும் போதும்
நாள் தோறும், உங்கள்
கால்களுடன் நடக்கின்றேன்.
நான்கு சுவர்களுக்குள்—ஒரு
நாடோடி இருக்கின்றேன்.

✲✲

தேன் நிலவில் தீமூட்டிச்
சாண் வயிற்றைத்
தாலாட்டும்
வானம் பாடிகளே!
நாள் தோறும்
ஊர் மாறும்
நாடோடிக் கவிதைகளே!

கால்போன
திசையெல்லாம்—உங்களுக்குத்
தாய்பூமி நிழல் கொடுக்கும்.

⁂

காம தேவன்
கோவிலுக்குள்
கட்டழகுத் தேரோட்டம்.
உங்கள்
கொச்சை மொழி
அர்ச்சனையே
கும்பாபிஷேகம்!
தூக்கத்தைக் காதலிக்கும்
முதல் இரவுக்
கனவுப்
பறவைகளே!
"அழகு
விளக்கெடுத்து"
அடிமை விலங்கொடிக்கும்
சுதந்திரத்தின்
சரித்திரமாய் ஆனவரே!
பூவிழியின் உற்சவத்தில்
பூமியின்
பாடல்களே!

⁂

ஆகாயக் கூரையின்கீழ்
லம்பாடி
ஆனவரே!
நாங்கள்
ஆனந்த சுதந்திரத்தில்...
சோகத்தின்
சித்திரங்கள்.

லம்பாடிப் பறவைகளே
உங்கள்
சங்கீதம்
கேட்கிறது!

**

ஊரோரம்
பார்த்துக்
கூடாரம் போட்டுப்
பாடும் அழகுகளே!
நீங்கள்
உல்லாச மலர்கள்!
நாங்கள்...
தாய் வயிற்றில் பிறந்து
தரைமீது
சுமைதாங்கிப் பறந்து
முறிந்த சிறகுகள்!
தென்றல் போல் நடந்து
புயல் காற்றில்
உதிரும்
இலைகள்!

**

நீங்கள்...
புயல் போலத் திரிந்து
தென்றலிலே
மலரும் வசந்தங்கள்
உணவு
வரும் போது
உதடு திறப்பவர்கள்!
உறக்க மயக்கத்தில்
உலகத்தை
மறப்பவர்கள்.

கண்மூடும்
இடம் உங்கள்
கட்டில் அறை ஆகும்.

⁂

பாதை வழிப்போக்கர்கள்.
பருவ விழிப்பூக்கள்!
வேர்வைக்
குளியலுக்கு
ஓய்வு தரும்போது...
வழியில் வரும்
நதி நீரில்
குளிக்கும்
அழுக்கு நிலவுகள்!

⁂

வாழ்க்கை
ஒரு விளையாட்டு!
தோப்பு மரங்கள்
உங்கள்
வாடகை இல்லாத வீடுகள்!

⁂

வெயிலில் விழும் நிழல்கள்
உங்கள் பிரச்சினையின்
மௌனங்கள்!
மாலை நிலவில் நீங்கள்
பூமியின் மயக்க நீச்சல்கள்!
பாதத்தின் நடைகள்
பவள மலர்களின் நடனங்கள்!
நீங்கள்
கவலைகளை மறந்தவர்கள்!

கவிதைகளாய் இருப்பவர்கள்!
இதய மலர்க்காட்டின்
இரவுக்
குயில்கள்!

⁂

உங்கள் குரல்கள்...
அருகினிலே இருந்து
உதடுகளில் ஓய்வெடுக்கும்
தூக்கங்கள்!
காதுகளைக் காதலித்து
கண்களினால்
பிரிக்கப்பட்டு...
கைதிகளாய் ஆனாலும்
கனவுகளில்
பேசும் வார்த்தைகள்!

⁂

மனங்களிலே பாடி
விளையாடும் நீங்கள்
மனித இன வானம்பாடி!

⁂

காற்று வந்து வீசிக்
கனவுகளைத் துணியாக்கி—உங்கள்
கண்மூடி ஓடும்
கண்ணாமூச்சி ஆட்டம்!

⁂

காலைகளில் பூத்து
மாலைகளின் பொம்மைபோல்
உதிர்ந்து விழும்
மலர்கள்!

அனாதைப் பிணம்போல—அந்த
அழகுகளின் சிரிப்புகள்
சருகாகும்
மண் தரையே
மலர்களுக்குக்
கல்லறையாய்
மாறிவிடும்!

⁂

ஊரெல்லாம் இடம் பிடித்து
ஓங்கி உயர்ந்து
சூரியனின் ஒளிமறைக்கும்
மரங்கள்...
காய்ந்த உடலோடு
பூமியின் தேமல்போல்
நிழல் வளர்த்து
காற்றினிலே ஆடி—ஒரு
நூற்றுண்டைத் தாண்டி
வாழ்ந்திருக்கும்.

⁂

கால கதி வீதியிலே
கடந்து வரும்
பாதைகளில்
கொஞ்சமாய் இருப்பவற்றைக்
கொஞ்சுகின்ற
உலகம்.
கோடிப் பெருக்கத்தில்
கூடு கட்டும்
சோகம்.
உல்லாசம் உங்களிடம்—துன்ப
ஊர்வலத்தில் எங்கள் மனம்!

⁂

உங்கள்
ஆயிரம் அழகுகளை
ரசிக்கின்ற ஆசைமனம்
கண்ணாடி ஆகிவிடும்!
அங்கே...உங்கள்
கண்பார்வை கல்வீசும்.
கல்யாண
எச்சில் இலை
கண்டால் உங்கள்
முத்த மழை!

⁂

என் மனது
உங்களுடன்
அன்றுடம் வாழ்கிறது.
என் கற்பனையின் கைகள்—உங்கள்
கஞ்சிக் கலயத்தை தொடுகிறது.

⁂

வாழ்க்கையைப் புரிந்து கொள்ள
வழக்காடிக்
கொண்டிருக்கும்
சம்பவங்கள் நாங்கள்
புரிந்ததையே வாழ்க்கையென்று
வழி நடந்து
புகழ் வளர்க்கும்
சரித்திரங்கள் நீங்கள்.

⁂

ஆழமாய்ச் சிந்தித்து
அனுபவத்தைச்
சுமப்பவர்க்கு
நாள்தோறும் வேதாந்தம்.

அமைதிகளை இமையாக்கி
மனங்களையே விழியாக்கும்
அனைவருக்கும் ஆனந்தம்!
நடக்க இருப்பதையே
நினைத்துத்
துடிப்பவர்கள்
உலகில் தலைகுனிவார்.
நடக்கும்
நிகழ்ச்சிகளை
வளர்த்து முடிப்பவரை
உலகம் தலைவணங்கும்.

⁂

இந்தச் சமுதாயம் ஒரு சாம்ராஜ்யம்!
இங்கே தனிமனிதன் பூஜ்யம்!
பொன்கிரீடம் அணிந்தவர்கள்
பூமியிலே
பிணமானார்!
முள் கிரீடம் சுமப்பவர்கள்
கண்ணீரில் உயிர் வாழ்வார்!

⁂

தினம் தோறும்...
அவசரத்தில் தலைதெறிக்க
அவரவர்கள் தடம்பதித்து
ஓடும் உலகத்தில்...
ஒரு கோடி
ஒற்றையடிப் பாதை!
பாதைகளின் ஓரத்தில்
விழிகளிலே
நழுவி விழும்
உங்கள் அழகுக்கு
விலாசமில்லை!

நாங்கள் எல்லாம்
கண்டுபிடித்த கதவுகளின்
விலாசத்திற்குள்
"அழகிற்கு மட்டும்
அனுமதி இல்லை!"

✻

எவருக்கும்
எட்டாத கனிகளெல்லாம்
எங்கள்
கொட்டாவியில் உதிரும்
என்று காத்திருந்தோம்!
ஆனால்...
கும்பகர்ணன்
பாத்திரத்தை
ஒத்திகையில் சரிபார்த்த கதையாகி
முற்றத்தில் உறங்குகிறோம்!

✻✻

காற்றுக்கும் ஆசைவந்து
நீங்கள்
கட்டியுள்ள ஆடைகளைத்
தொட்டு விளையாடும்.
வாழ்க்கைக் கவலைகளில்
நாங்கள் விட்ட பெருமூச்சு...
கடற்கரைக்குப்
போயிருந்தால்
கப்பல்கள்
கவிழ்ந்திருக்கும்!

✻✻

யார் இந்த ஓவியங்கள்?—இது
யார் இந்த தேவதைகள்?

அணைக்கின்ற நித்திரைகள்!
இனிக்கின்ற சக்கரைகள்!—நீங்கள்
அழகின் பாத யாத்திரைகள்!

⁂

உங்கள்
ஒரு காலின் அழகு கண்டால்
இன்னொரு கால் கனவு காணும்!
ஒரு கோடிக் கனவுகளின் அழகுகளே!
நடைபோடும் அழகுகளின் கனவுகளே!

⁂

நெருப்பு வைத்தால் துணி எரியும்
உங்கள்
துணி கிழிந்தால்
உடலையெல்லாம்
தீபங்கள் அலங்கரிக்கும்.

⁂

யாரேனும்
தூரத்தில் அவர் முகத்தைக் கண்டால்
அவர் நடந்து வரும் வழியில்
எந்தன்
இதய அருவி
இரு விழியில்
இருப்பதனைச் சொல்லுங்கள்!

⁂

காலை வானத்தின் மேல் கண்களை
நான் எறிந்து
என் கனவுகளில் எரியும்...
கதையை மட்டும் சொல்லுங்கள்!

இங்கே ஒருவன்
இருப்பதனை
ஞாபக மலர்களின்
காதுகளில் கூறுங்கள்!

⁂

என்றும் ஒரு வழியில்
அடியெடுத்து நடக்கும்
அவர் உருவம் கண்டால்...
அந்த வழியருகே,
ஆசை மர நிழல்களிலே,
இன்னும் நான் இருப்பதனை
யாரேனும் சொல்லுங்கள்.

⁂

இதுவரைக்கும் என் வாழ்க்கை
பொய் வாழ்க்கை—நான்
இதுவரைக்கும் சொன்னதெல்லாம்
பொய் வார்த்தை!
இங்கே என்
இதயத்தில் உண்மை
இருப்பதனைச் சொல்லுங்கள்.

⁂

வாழ்க்கை அழைக்கிறது!
வழியெல்லாம் இருள் கடந்து
அவருடைய உலகத்தில்
இடம் கேட்க
வந்துள்ளேன்.
அவர்கள்
அனுமதித்தால் நான் வாழ்வேன்!
மறுத்து விட்டால்...

மரணத்தை அணைப்பதற்கு
மயானத்தின் நடைபாதை தேடி
நான் நடந்து போய் விடுவேன்.

⁂

மாந்தோப்புக் காற்றில்
விளையாடி
மண்ணில் உதிரும் முன்
இலைகளே! நீங்கள்
என் கதையை அவரிடத்தில்
சொல்லி விட்டுப் போய்விடுங்கள்.

⁂

காற்றில் மிதந்து வரும்
என் காதல் கதையை
அந்த
இலைகள் எழுதி வைத்தால்
இதயம் அழுது விடும்.
வான வில்லைக் கூட
நான் எடுத்து வருவேன்!
கண்ணீரில் நனைத்துப்
பெருமூச்சில் உலர வைப்பேன்.
அந்தப்
புத்தாடைக் கொடுத்துப்
புதுக் கவிதை முடிசூட்டி,
லம்பாடிக் கூட்டத்தை—என்
மன நாட்டை ஆளவைப்பேன்.

⁂

காதல் வெயிலில் என்னைக்
காயவைத்த நிழலுக்கு
வார்த்தை வரம் கொடுத்தால்

என் வேதனையைச் சொல்லிவிடும்!
நானும் ஒரு
லம்பாடி ஆகிவிட்டால்
பூமித் தாயைக் கும்பிடுவேன்.
கண்சிமிட்டும் நட்சத்ரம்
கால் முளைத்த
பன்னீர்ப் பூவாய்
பூமியிலே நடப்பதுபோல்...
நான் புன்னகையின் தேராகி
புதுவழியில் நடைபோடும்
மனிதனுவேன்.

⁂

பின்னிரவில்... நீலவானத்தில்
குட்டிப் பாலைவனம் போல்
வெப்பம் கொட்டி
என் உடலைக் கொதிக்க வைத்த
வட்டநிலா வாய் திறந்தால்...
வெட்டொன்று
துண்டிரண்டாய்
என் குரலை எதிரொலித்தால்...
பிறை போலப் பூக்கும்
என மனத்தின்
பித்த சுகச் சுதந்திரத்தை
வார்த்தைச்
சித்திரமாய் எழுதிவிடும்!

⁂

என் வாழ்வின்
பகல் பொழுது வந்து விடும்!
வேரின்றித் தண்டின்றி...
சூரியகாந்தி ஒன்று
மேக வெப்பக் குளத்தினிலே

மிதப்பது போல்
சூரியனும் உதித்து வரும்—என்
காதலுக்கு வாழ்த்துப் பாடும்.

⁂

எங்கேயோ புறப்பட்டுப்
பொங்கிவரும்
இந்த
லம்பாடி கங்கைநதி
என்விழியில் சங்கமம் ஆகும்.
வெண்ணிலவும் மங்கலம் பாடும்!

⁂

இந்த
ஏகாந்தப் பிரவாகம்
இக்கரையைத் தொடும்வரைக்கும்
என் படகில்
இதயத் துடுப்போடு
நான் இருப்பேன்!

⁂

அக்கரையைத் தாண்டிப் போனல்
அங்கேயும் நான் வருவேன்!
ஆகாய கங்கை ஆனலும்
பிறை நிலவுப் படகில்
என் பயணம் தொடரும்!

⁂

பின் தங்கிச் சில நேரம்
அவர் அழகை ரசிப்பேன்!
முன் தாண்டிப் போயும்
விழி திறந்து காத்திருப்பேன்!
சொர்க்கத்தில் சிவன் தலைமேல்

இருந்தாலும்
அந்தக்
கற்பனைச் சோக வனம் விட்டு
அவரை அழைத்து வருவேன் !

※※

இமயமலை பனியாக இருந்தாலும்,
என் இதயத்தில் உருகி
அந்த கங்கை நதி ஓடி வரும் !
அடிவானம் கரையான
கடலுக்குள் அவர் போனால் — நான்
புத்த தேவன் கண்ணீர் போல்
முத்தாவேன்.

※※

அந்தியிலே திக் விஜயம்
அலைகடல் உன் சாம்ராஜ்யம் !
இரவின் இளவரசனே !
நிலவே ! உன்
அஸ்தமனம் காலையிலே—
லம்பாடிக் கூட்டம்
என் வானத்தின் நிலவாகும் !
கண்ணீரே அங்கே
காதல் கடலாகும்.

※※

என் இடத்தை நானறிவேன்
அவர் முகத்தை
நாள்தோறும் பார்ப்பேன் !
அவர் மனத்தைக் காதலிப்பேன்
மணல் வெளியில்
மணமேடை அலங்காரம் !
நுரை மீது

முதல் இரவுச் சிங்காரம்
அலைகள் நுரைகளுக்கு
நந்தவனம்—மன
ஆசைகள் எங்களுக்கு அந்தப்புரம்

⁂

அவர்களின்
கற்பனைகள் நான் உறங்கும்
சிப்பிகள்...என் கனவுகள்
விற்பனைக்கு வராத முத்துக்கள் !
படகாக...கட்டுமரமாக
பகல்கனவும், இராக்கனவும்
பவனி வரும்
இந்தக் கடல் மீது
கன்னத்தின் செந்தூரம்
காதல் நங்கூரம் ஆகும்—எங்கள்
வாழ்க்கைக் கப்பல்
ஒன்று மட்டும் அங்கே நின்றிருக்கும் !

⁂

கட்டி அணைத்திருக்கும்
காதலர்கள் நடுவினிலே—தென்றல்
காற்றுக்கும் வழியில்லையாம் !
ஆனால்...
அப்போது...
மனக்கடலில் புயல்வீசும்—அங்கே
திருக்குறளும் பொய்யாகும்!

⁂

நான்
தோள்களிலே கொஞ்சுவதும்
வெறும் பேச்சா? — நெருப்புத்
தொடர்கதைபோல் வளர்கிறதே
பெருமூச்சு!

வார்த்தை மேகங்கள் மயங்கும்
கண்ணுடி முகத்தில்
காதல் நிலா மறையும்!
அந்நியனின் குரலைப் போல்
காதுகளின்
கூப்பிடு தூரத்தில்...
அழுகுரல்கள்!
பிறகு...
வசந்த நிலாப் பூமுகத்தை
வார்த்தை சுகம் பாராட்டும்!
மறுபடியும் பெருமூச்சு வருகிறது!
பிடிவாதம் ஒரே மூச்சில் கரைகிறது!

⁂

இருள்கள்
வெளிச்சத்தின் சிகரத்தில்
இருந்து உருண்டு விழுவதுபோல்...
விளையாட்டு பொம்மைகள்
குழந்தைகளின்
முகம் பார்க்கும் பொழுது,
கைகளிலே இருந்து நழுவிக்
காலடியில் உடைவதுபோல்...
மறுபடியும் பெருமூச்சு வருகிறது!
பிடிவாதம் ஒரேமூச்சில் கரைகிறது!

⁂

ஒரு மழைக்கால இரவில்
என்முதல் காதல் கதையை
நடந்தபடி சொன்னேன்—கதை
ரசிகன் இங்கே தூங்குகிருன்...
தூங்கட்டும்!
அவன் தூக்கத்தில்...

என் சுயசரிதக்
கதவுகளைத் திறந்தேன்.

✻✻

அதன்
அறைக்குள்ளே...
விடியலிலும், இரவினிலும்
மனம் செத்து...
நான் ஒரு
மரச் சிறகுப் பறவை!
சிறகுச் சுமைகளிலே
செவ்வானம் போகாமல்
தரையில் விழுந்து—என்
மனக்காயங்கள்
தேக வாகனம் ஏறின!

✻✻

ஒரு நாள்
நான் உங்களைப் பார்த்தேன்!
மௌனங்கள் என்ன
காதல் கடிதமா?
மறுபடியும் வந்தேன்!
உங்கள்
கூடாரத்தில் கும்மிருட்டு!
என் இதய சிம்மாசனம்
இனி ஒரு மயானம்!

✻✻

நம் வானத்தின் பால் வீதியிலே
மழை மேகங்கள்!
காலம்
நான் யார் என்று
சொன்னது.

✻✻

நேற்று...இரவில்
கனவுச் சுகங்கள்
திரிந்தபால் ஆனபின்
என் கண்ணீர்த் துளிகள்...
நிழல்கள் இருளாக
உலகம் எனக்காக அழவில்லை!
அங்கே நான் மட்டும்...

⁂

விடியலில்
பாரசீக ரோஜாக்கள்
இருண்ட உடைகளில்...
இதுவும் நேற்றுதான்!
இன்னும் "என் இன்று"
வரவில்லை.
ஏன்? அது நாளைகூட வராது!

⁂

இதோ அந்தக் காற்றினிலே
குளக்கரையின்
தண்ணீர் இரவில்...
எழுந்து, விழுந்து
தொடரும்
சோகங்கள்!

⁂

எந்தன்
செல்லப் பெயர் மறந்து
நினைவுகள் திருவோடாக...
குடும்பப் புகைப்படம் தேடி,
என் குழந்தை முகம் பார்த்தேன்!
கீழ்க்காற்றில்
வார்த்தைகள் தேய்ந்தன!

⁂

மனம்...
பசுமாடுகள்
காகிதம் போல் எரியும்
பச்சைவயல்...
என்வானம் பாடியே!
நான் பாட முடியுமா?

# கிறுக்கச்சியின் விறகுகள்

[...இன்னும் அந்தக் கிறுக்கச்சியின் முகம் எனது நினைவுத் திரையில் அழியாமல் இருக்கிறது. கேரள பூமியின் மலைச் சாரலில்—தமிழகத்தின் கடைசி மூலையில்—ஒரு குக்கிராமத்தில் வசித்த நாட்களில்...நான் அவளைச் சந்தித்தேன். முல்லை நதியை ஒட்டியிருந்த ஒரு தென்னந்தோப்பிற்குள்ளே கவிக் கிறுக்கில் நடை பழகிய ஒவ்வொரு இளங்காலையிலும் அவளை நான் பார்த்தேன். சிறுவர்களை நேசித்துக் கொண்டும், விறகு பொறுக்கிக் கொண்டும், ஒரு முட்டைக் கோழியைப் போல முணங்கிக் கொண்டும் வாழ்ந்த அவள் ஒருநாள் செத்துப் போனாள்.

நெஞ்சின் ஞாபகக் குறிப்புகளும், எனது கற்பனையும் கலந்த ஒரு கலவை இது. ஏன்—இது—அந்தக் கிறுக்கச்சிக்காக நான் செலுத்தும் ஒரு சொப்பனுவஸ்தையோடு கூடிய அஞ்சலியும் கூடத்தான்.]

இங்கே வர வேண்டாம்!
இதயங்கள் அழுமென்றால்...
இங்கே வர வேண்டாம்!

⁂

முன் இரவில்
நுரை சிந்தும்
ஈசான மூலையிலே...

முல்லை நதிப் புலம்பலிலே...
மேகவதிச் சந்திரிகையாள்
பொன் ஒளியின் லகரியிலே...
மெத்தை நிழல் இளந்தோப்பில்...
காலத்தின் நடை லயத்தில்
கருக்கிருட்டில் இங்கொருத்தி
மூலமற்றுப் போனுள்! வாய்
முணங்கலுக்குள் கதையானுள்!

⁂

இங்கே வர வேண்டாம்!
இதயங்கள் அழுமென்றுல்...
இங்கே வர வேண்டாம்.
அவளோ ஓர் கிறுக்கச்சி!
ஆசையற்ற ஞானவெளி...
பிறப்புறக்கம் கலையாமல்
பேசும் சிறுகுழந்தை

⁂

ஆடையெல்லாம் கிழிசல்கள்...
அவள் நாக்கின் புலம்பலைப்போல்!
அரைகிறுக்குப் புன்னகையும்
"ஆளில்லாச் சொற்பொழிவும்"
சிரிப்பும்,
சிணுங்கலுமாய்
வெட்ட வெளிக் கூண்டினிலே
"விதிமலரின்
பெருமரத்தை"
நீதிசபைத்
தேவதை போல்
அவள்
நின்று விசாரிக்கும்
நேர்த்திகளும்...
வெறும் காற்றில் உதிர்ந்து

வெங்கனலில் நீராடி
சாவுக்குப் பலிப்பூவாய்ச்
சாம்பல் மலரானுள்.

✲✲

இந்த மலையூரில்
எங்கள் நினைவுகளில்
இங்கொருத்தி உறங்குகிருள்!
இங்கே வர வேண்டாம்
இதயங்கள் அழுமென்ருல்
இங்கே வர வேண்டாம்!

✲✲

பகல் மரணச் சம்பவத்தில்
நெஞ்சுருகி
புயல் மௌனம்
அழுவது போல்
தென்றல் வருகிறது.
இரவென்னும் குழந்தையைக்
கொஞ்சுதற்கு
இனிய மனக்காட்டில்
இதழ் திறந்து
பூக்கள் சிரிக்கிறது!

✲✲

சூரியனின்
"சலவைக்கல்
கல்லறை" போல்
வானத்தில் கன்னி நிலா
உதிக்கிறது!
கன்னம்
சிவக்கிறது!
நட்சத்ரக் கூட்டமெல்லாம்
முள்ளாகி

மேகத்தில்
தைத்துக் கிடக்கிறது!
மின்னல் துடிக்கிறது!

⁂

நிலத்தை உழுது வரும் களைப்போடு
கிறுக்கச்சி நினைவுகளைக்கதை போலப்
பேசி வரும் மனிதர்
பெருமூச்சு விடுகின்றார்!
விளக்கெரியும் நேரத்தில்
கிறுக்கச்சி விழிமூடி
எரியும் இடத்தில்
வெளிச்சம் தெரிகிறது!

⁂

தென்னை மரச் சிறகெல்லாம்
அவள் நினைவில்...
தேம்பி அழுதபடி
ஓய்ந்து கிடக்கிறது!
காற்றடித்தால் தோப்புக்கு
நாக்காடும் இலைகள்
ஒப்பாரிப் பாடல்களை—நதி
ஓரம் வளர்க்கிறது.
சாவோடு போனவளை—ஊர்ச்
சாவடியில் நினைத்தபடி
புராணம் படிக்காமல்
கிராமம் துடிக்கிறது!

⁂

இமாலயச் சோகங்கள்
எங்கள்
இரு விழிகள் எங்கும்
ஐந்து ஜீவநதி!

அழகு நிலா ஆலயத்தில்
அவளுக்கு அஞ்சலிகள்!
நெஞ்செல்லாம் சஞ்சலங்கள்!
நரை விழுந்த விழுதுகள் போல்
சடைமுடிகள் நிழல் கொடுத்த,
எங்கள் ஆலமரம்
இலைபோல் உதிர்ந்ததுவோ?
விறகெடுக்கும் வேளையிலும்
தோப்புக்குள்
வீணை போல் பாடியவள்
வேறு இடம் போய்விட்டாள்!
வசந்தம் சருகானுள்!

⁂

ஆகாய மாளிகையில்—
பிறை நிலவு முடிசூடும்
இரவுகளை வெறுத்தாளோ?
சூரியனின் வெயில் வீச்சில்
ஊர் சுற்றும்
"சுதந்திரம் என் பிறப்புரிமை"
சுகம் என்று நினைத்தாளோ?
அதிசயமாய்ப் பூத்தமலர்
ரகசியமாய் உதிர்ந்து விட்டாள்!

⁂

யார் மடிந்து போன பின்னுல்
தாய்க்கிராமம் முழுவதுமே
ஒரு குரலில் அழுகிறதோ...
யார் மறைந்த பின்னுலே
வசந்தங்கள் எல்லாமே
கல்லறைக்குப்
பூமாலை தொடுக்கிறதோ...
யார் மரணம் ஆன பின்னே

எங்கள் வீட்டுத்
தாலாட்டுப் பாடல்களும்
ஒப்பாரி ஆனதுவோ...
அவள் என்றும் எங்கள்
இதய சிம்மாசனத்தில்
கிரீடம் அணிந்திருப்பாள்.

※※

இங்கே...
வேப்ப மர நிழல் ஓரம்
வெப்ப மணல் ஓரம்...
மரக்கிளைகள் தென்றலிலே
விளையாடும் தூக்க நேரம்
அலைக்கொடியில் நுரை பூக்கும்
ஆற்றோரம்...
எங்கும் அவள் நினைவு!

※※

நாங்கள்
காலையிலே சுவாசித்த காற்று
அவள்! எங்கள்
கவலைகளைச் சிரிக்கவைத்த பாட்டு!
கிறுக்கச்சி! எங்கள் உயிர்மூச்சு
அவள்...இங்கே
கிடைகளிலே ஆடுகளைத்
தாலாட்டும்
கழுத்து மணிப் பாட்டு!
அவள் கைகள்
அறுவடையில்
விளையாடும்!
அரிவாள்கள் அப்போது
போர்வாள்கள் ஆகும்!
அவள்...

வெட்டரிவாள் வீசிவரும்
வேகத்தைப் பார்த்து
காட்டு மரம் குத்தகைக்கு
வந்தது போல் தலைசாயும்!

❊❊

திண்ணைப் பேச்சு...
தெம்மாங்குப் பாட்டு
தெருவெல்லாம் அவள் கூத்து!
அவள்...
கர்வத்தின் சிகரமாக...
தவறுகளின் பள்ளமாக...
வாழ்க்கை நடத்தாமல்
இதயச் சமவெளியாய்
இருந்த மகள்!

❊❊

ஒரு வேளை
நெருப்பு கர்ப்பவதியாகும்
கதை நடந்து
கிறுக்கச்சி வந்து விட்டால்...
பூமித்தாய்
சாகாவரம் பெற்ற
சத்தியத்தின் தலைநகரம்
ஆவாள்!
அதற்குப் பின்
எங்கள் கிராமத்தின்
எரியும் பிரச்சினைகள் எல்லாம்
இருளில் மறைந்து விடும்!

❊❊

ஆத்மாவின் நீரோட்டம்
மணல் வெளியாய் மாறிவிட்டால்—மன

ஓடங்கள் எல்லாம்
ஒட்டகங்கள் ஆகிவிடும்!
அனுபவத்தின் பக்கங்கள்
அச்சாகி வெளி வந்த
அறிவுப் புத்தகத்தை
நெருப்பில் இழந்து விட்டோம்!
சாகும் வரை வளர்ந்த
உண்மைச் சரித்திரத்தை
வரைகின்றேன்!
கிறுக்கச்சி நினைவுகளில்
இரங்கற் பா எழுதுகிறேன்!
இயற்கை அழுகிறது!
இருவிழியும் அழுகிறது!
சத்தியமாய் கிறுக்கச்சி—மயானச்
சாம்பலிலும் உயிர் வாழ்வாள்!

⁂

அன்ருெரு நாள் வாசலிலே..
அவள் முகத்தைப் பார்த்தேன்!
மாலையிலே...
மானிடத்தின் சிறகுகளாய்
மண்ணில் விளையாடும்
குழந்தைகளை அணைத்தாள்!

⁂

தானே விறகெடுத்து,
தானே தீ மூட்டுகிருள்
தாய்ப்பாசம் அலைவீச
தானும் ஓர் விறகாளுள்!
தீக்காயம் உயிர்வாங்க
மயானத்தில் எரிகின்ருள்!

⁂

அவளோ ஓர் கிராமத்துப் பறவை
அவளுக்கும் இளமைக்கும் தனிமை!
புகழ்வானில் பூக்காத நிலவு.
அதிர்ஷ்டப் பூக்காட்டின் அரும்பு.
அங்கங்கள் அழகுக்கு விலங்கு — என்றும்
சோகங்கள் தான் அவளுக்குச் சிறகு!

⁂

அந்தக் கிறுக்கச்சி
இந்த நதிக்கரையின்
இளந்தோப்பில் உறங்குகிருள்!
இங்கே வர வேண்டாம்!
இதயங்கள் அழுமென்ருல்...
இங்கே வர வேண்டாம்!

## கூவம் நதியின் காகிதப் பூக்கள்

கூவம் நதிக் கரையின் கோலம்...
புதுக் கோலம்.
மரநிழல்கள்...
மண்ணின் பச்சைக் கனவுகள் போல்
புல் வெளிகள்...
நிழல்களிலே நடந்தபடி,
தீயணைக்கும் படைபோலத்
தண்ணீர்க் குழாய் ஏந்தும்
மனிதர்கள்.
அவர்கள்
பனிமலையை
நதியாக்கும் வெயிலோடு
பசியில் உறைந்தவர்கள்!

⁂

இந்த நதி
சமுத்திரக் கரைதேடும்
சாக்கடை ஊர்வலம்!
மலைகளிலே
உருவாகும் நதிகள் எல்லாம்
சொர்க்கம் — இது

அலைகளிலே பிணங்களைத்
தாலாட்டும் நரகம்!
மூக்குச் சளிபிடித்த முகங்களுக்குக்
கவலை இல்லை!
தாக்குப் பிடிக்க முடியாமல் தலைநகரம்
கதறி அழுகிறது!
ஆகாய மேகத்தின்
அழுகல் நடை மழை எழுத்து!
மலருக்கு எதிராக
வளரும் விளம்பரமோ?

✻✻

ஏ! கூவமே...
சென்னை அரக்கோணம்
வழிப்பாதை நடுவே...
தமிழ்நாட்டில் ஓர் ஊரின்
பேராக இருக்கின்றாய்!
தலைநகரில் ஆறாக,
வந்து நீ ஏன் அழுக்கானாய்!
குசஸ்தலம் உன் குருகுலமாம்!
குருநாதன் பூண்டிக்குப்
போய் விட்டான்!
அழகுமான் நீராக மாறி
ஓடுவதைப் போல அவன்
ஆறானான்.
சிஷ்யனே! நீ மட்டும்
சென்னை நகர் எல்லை வரை
புஷ்பம்போல் ஓடிவந்து—இங்கே
குஷ்டரோகி ஆனது ஏன்?

✻✻

அமாவாசை நாளைப்
பௌர்ணமியாய் மாற்றும்
அவசரங்கள் அங்கே!

மண் புழுவை மின்னலாக்கும்
மனக் கனவுக் கோலம்.

✻✻

இந்திரன் இவர் என்றும்
சந்திரன் இவர் என்றும்
இவரால் தான் வெயிலடிக்கும்!
இவரால் தான் மழை பொழியும்!
என்றெல்லாம் எனக்குத்
துதி பாடத் தெரியாது!
ஏழைகளே என் தெய்வம்!
சேரிகளே என் கோவில்!
அவர்களுக்குச் சுகம் கொடுக்கும்
தலைவனுக்கு நான் தொண்டன்!
தாய்ப்பாலும் இல்லாமல்
தாலாட்டும் கேட்காமல்
கைக்குழந்தை அழுகிறதே!—கூவம்
கங்கைநதி ஆய் விடுமா!(?)

✻✻

சாக்கடையின் நதிநீரில்,
தாஜ்மகாலின் நிறம் வரைய
வந்தவர்கள்—
நிழல் சிறுத்த வெயிலில்
சாயாக் கடை ஓரம்
போகும்
பசிக்கோலம்!
காற்று வீசும்போதும்—அதைக்
கனவென்று நினைப்பவர்கள்!
அவர்கள்—
சமுதாயப் பள்ளத்தில்
முகம் புதைத்து
சமதர்ம வானத்தைப்

பார்க்க முடியாமல்
இருக்கும் மனித இருள்கள்!

❋❋

ஒரு நாளில்
மேகக் கருவறையில்
மின்னல் வெளிச்சம் வரும்!
வானமகள் பெற்றெடுத்து
விளையாட்டாய்
விட்டெறிந்த மழைக்குழந்தை
தரைமீது தவழும்!

❋❋

கடலாக, நதியாக
குளமாகக்...கிணருக
எத்தனையோ தொட்டில்களைக்
கட்டி வைத்து
அவளை...
பூமிமகள் சுமக்கிருள்!

❋❋

உயரத்தில் இருந்து
விழுந்தாலும்,
ஒரு வகையில்—அது
வெற்றிச் சரித்திரம் தான்!

❋❋

பாதாள கங்கைப்
படகுகளில் யார் வருவார்?
ஏழைமக்கள் இருள்களுக்கு—இங்கே
விடியல்களை எவர் தருவார்?

❋❋

வெயிலடித்தால் மண்மேடு!
மழை விழுந்தால்
புதை சேறு!

புயல் அடித்தால்
காற்ருடி ஆகும்
கூரைவீடு!

⁂

வெள்ளம் வரும்போது
நீச்சல் பழகும்
ஆசையுடன்
குதிக்கும் ஏழைக்கூடு!

⁂

இதயக் கண்ணுடி
மழை நீரில்
உடைந்து விழும்.
வார்த்தைக் குகைக்குள்ளே
மனக்குயிலின் அழுகுரல்கள்!
வீட்டை இழந்தவர்கள்
வெட்டவெளி
மரநிழலின்
விருந்தாளி ஆவார்கள்!

⁂

நதியை மணக்க வைக்கும்
நாடகத்தைப் பார்த்து
மழையும் சிரிப்பதுபோல்—மின்னல்
மலர்க்கோடு பூத்து வரும்.

⁂

ஒருநாள்...
உதயம் நம் அருகே
இறங்கி வந்து...
உட்கார்ந்து கதைபேசி
புல்வெளிக்கு
நெருப்பு வைத்துப் போனது.

⁂

அப்போது...
நம் மரணத்தின் காதலர்கள்
மன்னர்களாய்
வந்தார்கள்!
அனைவரையும்
ஒற்றைக்கால் மனிதராக்கி
அவர்கள்
வானத்தின் உயரத்தில்
இருந்தார்கள்.

ӝӝ

இன்று...
ஒற்றைக்கால்
ஒருகோடிக் காலாகி
நடந்த பயணம்!
முடிவில்
உயர்ந்த மலைச்சிகரம்!

ӝӝ

வழிதோறும் புல்வெளிகள்
நிழல் இருட்டு
இலைகளினால்
நமக்கெல்லாம்...
இளைப்பாற இடம் கொடுக்கப்
பூத்திருந்து
காத்திருந்த
பொன் மரங்கள்!

ӝӝ

நீண்ட பயணத்தில்
நண்பர்கள் ஆனவர்கள்
"நாம்" என்று சொன்னார்கள்
"நான்" என்ற ஆணவத்தைக்

கூவம் நதி மீது
கொண்டு வந்து போட்டார்கள்.

⁂

கூவம் நதியின்
காகிதப் பூக்களே!—நீங்கள்
கூவி அழுகின்ற
குரல் இங்கே
கேட்கிறது!
கானல் நீரில் தூண்டில் போட்டு
மீன் பிடிக்க முடியுமா?
தீமைக்குத் தீயிடுவோம்!
தேவைக்குக் குரல் கொடுப்போம்!
தோழர்கள் ஒன்றுனால்—உழைப்பே
தொழிற்சாலை ஆகிவிடும்!

⁂

மாலை விருந்துகளில்...
சீனத்துக் களிமண்ணின்
சிங்கார வெண் தட்டில்
மீனும் கறிவகையும்
யாருக்கோ
வரவேற்புத் தருகிறது!
இலவச வைத்தியம்
இல்லாத பசிநோயில்
நீங்கள் இன்னும்
இருக்கின்றீர்!

⁂

அங்கே...
விருந்து முடிந்து,
விடியலுக்குப் பின்னும்
தூக்கங்கள்!
அழகான பெண் உடல்மேல்,

கலையாமல்
இருக்கின்ற...
ஆடைகளைப் போல
அவர்கள் உறங்குகிறார்!
அந்தத்
தூக்கத்தின் வாசகர்கள்...
தரும் குரல்கள்
வாசல்களைத் தாண்டி
வெளியே வருவதில்லை!

⁂

நாக்குகளைத் தூதுவிட்டு,
மறுபடியும்
ஞாபகத்தில் பூக்காத...
வார்த்தைகளைத் தூவுகிறார்!
உறக்கம் மலராகும்
கனவு மரம் வைத்து...
இரவை வளர்க்கின்றார்!

⁂

நீலவானத்தின் இடம் எல்லாம்
நிரப்பிய பின்
மேலேறிக்
காற்று உறங்கும்
மண்டலம் போல்—அவர்
கண்மூடித் தூங்குகின்றார்!
பௌர்ணமியின் தாலாட்டில்
பூ உறங்கும்...அதுபோல...
ஒருவர் மட்டும் இருந்தால்—அறைச்
சுவர்கூடத் தூங்கும்...அதுபோல...
பகலை இரவாக்கி
அவர் மயங்கும் உறக்கங்கள்.

⁂

வானவில்லில் அம்பு வைத்துப்
போராட முடியாது!
கூவம் நதியின்
காகிதப் பூக்களே!
கூவும் குயிலாகி,
என் பாடல்களில் உங்களுக்குக்
கொள்கைத்தேன்
நான் தருவேன்!

¤¤

## கல்லறை

சிவப்பு நிற மேற்கு...
மேகத்தில் ரோஜா விளக்கு...
நிலவின் விதவை வெளிச்சம்
வராத இரவு!
ஆகாயம் சூரியனின்
குங்குமச் சேலைகட்டும் அஸ்தமனம்
ஒரு கல்லறை ஓரம்...

※※

## எதிர்வீட்டுக்காரர்

என் வீட்டுக் கட்டில்!
இரவெல்லாம் அந்த
ஆசனத்தில் சாய்ந்திருப்பேன்
நள்ளிரவுக் காட்சிகளை
காசுபோல் எந்தன்
"கற்பனையின்"
கட்டைவிரல், சுட்டு விரல்
இரண்டுக்கும் நடுவில் வைத்துத்
தூக்கி எறிந்து
கண் கனவுத் தரைமீது
விழுந்தவுடன்
இருள் முகத்தைப் பார்த்திருப்பேன்!

இரவெல்லாம் தூங்காமல்
விழித்திருப்பேன்!

⁂

எதிர் வீட்டுக்காரர்
புதுப்பட்டு ஆடையுடன்
அறைப் பயணம் போகும் நேரம்
ஆசைகளின் போராட்டம்!
சாளரத்தின் அருகிருந்து
கதவுகளைத் திறந்து
கனவுமுகம் காட்டுவதைப்
பார்த்திருப்பேன்.
வீட்டின் இருட்டறையில்
வெண்ணிலவின் வெளிச்சங்கள்,
அவர் உடல்மேல்
பால் போல வந்து விழும்!
பனிக் காற்று வீசி வரும்!
பளிங்கு போல் கண்ணிரண்டை
அலங்காரம் செய்யும்!

⁂

கடைவீதிப் பைகளுக்குள் — அவர்
கனவெல்லாம் காத்திருக்கும்!
பூங்காவில் ஓய்வெடுப்பார்!
தாய்நாட்டுக் கொடி ஒன்றைக்
கைகளிலே பிடித்திருப்பார்!

⁂

மரங்களுக்குப் பின்னாலும்,
வாசலுக்கு முன்னாலும்,
தவம் இருப்பார்!
எப்படி அவர் குரலிருக்கும்?
இதுவரை நான்
கேட்டதில்லை!

என்னைப்போல் இருப்பவரைச்
சுடும் கண்கள்...
எப்போதும் தலைநகரச்
சந்தடியில்—அவர்
விலைபேசிப் பொருள் வாங்கும்
கடைகள்

⁂

சமையல் அறை மேஜையிலே
தாழ்வு மனம் கொண்டபடி...
உணவுக்குக் காத்திருப்பேன்—என்னை
உதவாத பொருளாக நினைத்திருப்பேன்
என் எதிர் வீட்டுக்காரருக்குப்
புதுமலர் போல் மனைவி!
வீட்டுக்குள் நடை போட்டு
ஒவ்வொரு நாளுக்கும்
உயிர் தருவாள்!

⁂

வாழ்க்கை ரகசியங்கள்
வசிக்கும் அறைக்குள்ளே வந்து,
ஆடை எடுத்துப் போவாள்.
நீண்ட கருங்கூந்தல்
ஆலமர விழுதுகள் போல்
அவள் முதுகில்
விழுவதும் ஒரு அழகு!
பெரிதாக அலை எழுந்து
பிரிந்து இடம் மாறும்,
நதி நீச்சல் போல அவள்
குதித்து நடப்பாள்...

⁂

அவள் "கால் செருப்பு" கறுப்பு நிறம்!
கணவனைக் கண்டதுமே
கழுத்தில் முத்தம் இடுவாள்.

கண் மயங்கி, அவர் உடுத்தும்
ஆடைகளைத் தொடுவாள்!

⁂

அவர்களது நடனங்கள்
இரவு தரும் சுகங்கள்!
அவர் நாக்கு—அவள் காதில்!
அப்போது—அழகெல்லாம்
கொண்டாடும் சொர்க்கத்தில்
அவளிருப்பாள்
குடிவெறியில் தள்ளாடி
நரகத்தின் வாசனையில்
அவர் மிதப்பார்

⁂

தெருவீதி மக்கள்
காற்றினிலே கால் பறக்க—கண்கள்
கவலை மலர் சிந்த,
காதுகளைத் தீ எரிக்க—அவரைக்
கண்டதுமே தலைகுனிவார்?

⁂

அந்த முகங்கள்
வறுமையின் எச்சரிக்கை
வரையப்பட்ட சித்திரங்கள்!
அவர்கள்...
பின்புறத்தில் தொடங்கி
முன்புறமும் கிழிசல்களைக்
கிறுக்கி வைத்த
ஆடைகளை அணிந்திருப்பார்

⁂

குதிரைக்காரர்கள் வீதிக்கு வந்து
சவாரி வட்டமிட்டு

“ஏன் நீங்கள் சாக வேண்டும்”
என்று அவரைக் கேட்பார்கள்!
எதிர் வீட்டுப் பணக்காரர் மனைவி,
எனக்கொரு நாள்
அழைப்பு அனுப்பினள்
என் படுக்கை அறையின்
பின் சுவருக்கு
எதிராக
வாய் திறந்து வாதம்
செய்தாள்
“என் கணவன் மடிந்து விட்டான்
இளம் கனவு இதற்குள்ளே
முடிய முடியுமா?” என்று .
முகமுத்து உதிர்த்தாள்.
பொய்யில்லை அவள் வார்த்தை என்று
நம்பிக்கை வளர்த்தேன்.
கட்டி வைத்த பின் சுவரைக்
குட்டிச் சுவராக்கி,
மூன்று சுவரும் என் அறையும்
முக்காட்டு மலர் தேடி...
மோகத்தில் மிதந்தன.

⁂

வெண்ணிலவு வண்ணம்
ஜன்னல் வழி வந்து
ஆத்ம சிநேகிதியைத் தேட,
அப்படியே விழிமூடி
எப்படியோ நான் இருந்தேன்
என் கட்டில் மீது
எப்போதோ மரணமான
காதல் மறுபடியும் பொங்கிக்
கண்ணீராய் விழுகிறது.

⁂

தூது வந்த கனவெல்லாம்
முள்ளாகித்
தொண்டையிலே
குத்திக்
காதல் வார்த்தைகளைக்
காயப்படுத்தியது
என்னை ஒரு பூங்காவில்
நான் பார்க்கின்றேன் !
கும்மிருட்டு வேளை
குதிரை மேல் ஏறி
சமாதான ராணுவத்தின்
தலைவனாக வருகின்றேன்.
என்றாலும்
குதிரைகளின் இரும்புக்கால்
கொஞ்சமும் வளையவில்லை !
எல்லாமே என் கனவு !

⁂

அலுவலகத்தை
மூடிவிட்டு வருபவர்கள் அனைவருமே
இந்தக் கதையினையே
நொந்து நொந்து
சொல்கின்றார்.
ஒரு முறை தன்னை
விற்றவர்கள்
மறுபடியும் தன்னைப் பெறுவதற்கு
முடியாது !
ஒன்றும் நடக்கவில்லை
ஒருவருக்கும் வெற்றியில்லை.

⁂

இரவு மட்டும் வருகிறது !
நிலவு விளக்கும் அணைகிறது !

எல்லாமே இருள் ஆனால்
எதிர்காலம் திரையாகும்
இறந்து முடிந்தவர்கள்
எழுந்து நடந்து வந்து
இறக்கத் துடிப்பவரை
அழைத்து நடப்பார்கள் !
இங்கே
கனவெல்லாம் கலைந்தாலும்
கல்லறைகள் அழியாது !

## பிரம்மச்சாரியின் மகன்

முதுமையின் விலங்குகளை இழந்த
அடிமையே வருக !
தூக்கம் தான் இங்கே
சுதந்திரத்தின் சபையாகும்
நாளுக்கு நாளாய்
நிழலாகிக் கனவானாய் !

❋❋

படுக்கையிலே உனக்கு
பசியெடுக்கும் ...
உணவாக
அழகி ஒருத்தி
அருகில் வர வேண்டும்

❋❋

நீ நடக்கும் பூங்காவில்
காதல் அரசர்கள்
தலைவணங்கிக் காத்திருப்பார் !

❋❋

அர்த்த ராத்திரியில்
அழகுக்குக்குடை பிடிப்பார் !

மன்மத தேவனது
மண்டபத்தில்
தோள்களிலே சுகம் பெறுவார்!

⁂

"இன்று நான் காதலிப்பேன்!
இல்லையெனில் சாவேன்!" என்பாய்!
உன்
மரண சபதங்கள்
நெஞ்சில் நெருப்பு மலர் சூடும்—ஆனாலும்
உறக்கம் வரும் போது
உதிர்ந்து விழுந்துவிடும்!

⁂

நீ
நடைபாதைச் சொர்க்கத்தில்
காத்திருந்து
நரக மலர் மாலைகளை
விலை பேசாதே!
மார்பில் அணைத்தவுடன்—அந்த
மாலைகள் சருகாகும்!

⁂

நேரம் குறித்து
நிகழ்ச்சிகளை நிச்சயிக்க
அலைவதிலே,
உனக்கு ஒரு வாரம் தான்
முடிகிறது
தோல்விகளை வெளியிட்டே
தோற்றவன் நீ காதல்
சந்திப்பு நாட்களை
யாரும் கொஞ்சம் தள்ளி வைத்து
விட்டால்,

நீ துடி துடிப்பாய்! — உன்
நடைமுறையைப் பார்த்தால்
அடுத்த நூற்றாண்டில் தான்—ஒரு
அழகியை நீ காதலிப்பாய்.

⁂

வேலையில்லாத் திண்டாட்டம்
வெயில்கள், மழைத்துளிகள்
வெறும் வார்த்தை ஊடல்கள்
இருப்பதை நீ அறிந்திருந்தால்,
இருக்கும் பணமெல்லாம்
இதய சுகம் கொடுத்திருக்கும்!

⁂

உலகத்தில் காதலிக்க
உன்னாலே முடியாது!
பிரம்மச்சாரி ஒருவன்
பிரமதேவன் ஆனதனால்
பிறந்த அனாதை நீ!
தந்தை பெயர் தெரியாத
தாய் வீட்டுக் குழந்தை!
காதலுக்குக் கல்லறையைக்
கட்டிவைத்தான் உன் தந்தை!
கல்லறையை காதலித்துக்
கண்மணியே! நீ உறங்கு!

**நாட்கள்**

பொய் முகங்கள் நாங்களாம்!
பூமித்தாய் வயிற்றில்
நாள் தோறும் பிறக்கின்ற
காலத்தின் புதுமலர்கள்!
முடமான கால்கள்
நடக்க முடியாமல் போனது போல்

உண்மைகளை வார்த்தைகளில்
உச்சரிக்கும் துணிவின்றி...
இதழ்மூடி இருந்தவர்கள்—கால
இலக்கியத்தின்
சிறுகதைகள் !

⁂

பகலுக்கும், இரவுக்கும்
பாலம் உருவாகப்
பாதை அமைத்தவர்கள் !
சூரியனை ஒரு கண்ணாய்ச்
சந்திரனை மறு கண்ணாய்...
வைத்து வணங்கி,
வானில் விழி
திறப்பவர்கள்.
வெயிலும், நிழலும்
கூட்டாட்சி
நடத்தும்
உலகத்தில்
தினம்தோறும்
ஓடி விளையாடுபவர் !

⁂

வைரத்தைத் தந்துவிட்டு—எங்கள்
கைகளையே இழந்தவர்கள் !
வாழ்வுக்குப் பரிசாக
வானத்தில் இருந்து
பூமிக்கு வந்தவர்கள்
ஆகாயம், நிலவு, நட்சத்ரம்
வெண்மேகம்
அத்தனையும் கொண்டு வந்து தந்தவர்கள்

⁂

பகலுக்கு—"இரவுக் கல்லறை!"
இரவுக்குப் பகலே கல்லறை!
ஆளுக்குப் பாதி விடுமுறை!
நாள்தோறும் இரண்டு கல்லறை!
பூமியிலே இளைப்பாறத்
துடிக்கின்றோம்!
நாங்களே கல்லறைக்கு—ஒருநாள்
நடந்து வரப்போகின்றோம்!

**கவிஞன்**

காதல் சொப்பனங்கள் பிணமாக...
துப்பாக்கிக் கண்கள்
இதயம் துளைக்க...
தலைக்குள்ளே காயங்கள்...
மனநோய்க்கு ஆளாகித்
தனிமரமாய் இருந்தான்...

**

பனிபோல் உடல்குளிர்ந்து
ஆடை களைந்து,
தீப்புகைகள் திரைபோட,
நிலமகளின் மகன் ஆனான்!

**

நண்பர்கள் எல்லாம்
இவன் இனிமேல்
"சாகாவரம் பெற்ற
கவிதைகளை எழுதட்டும்...இல்லையெனில்
சாவில் சுகம் பெற்றுக் கவலைகளை
மறக்கட்டும்" என்றார்கள்.
அவன் இன்று இல்லை.
அவன் கையில்
பேனாவும் இல்லை!

**

என் நரைமுடிகள் அறிவுக்குக் கிரீடம்
என் நடைபாதை அனுபவத்தின் சிகரம்!
என் மூளை வெளிச்சத்தில் — நாளின்
இருள்கள் எரியும்!

⁂

இன்னும் நான்
தாய்முத்தம் பெறும் குழந்தை — என்றும்
காதல் என் சுகக்கவிதை!
காலத்தின் மாறுதல்கள்
எனக்கில்லை! — ஆனால்
காற்றில்லாக்
கோடை இரவுகளில்
முகம் கொஞ்சும் தாயின்
முத்தமழை நினைவுவரும்!

⁂

அவளுடைய
கறுத்த உதடுகளின்
கனவு நிழல்களிலே
தூரத்தில் இருக்கின்ற
முத்த ஈரத்தை
நினைத்தபடி ஏங்குகிறேன்!
மண்ணுக்கு முத்தமிட
மரங்களிலே இலை உதிரும்!
காலத்தின் குழந்தைபோல் — நான்
காலெடுத்து நடக்கின்றேன்.

⁂

வாழ்க்கையின்
மூடுபனியாகும் ஒப்பனை — என்
முதுமைக்குத் திரைபோடும்!

வாலிபனைப்போல் எந்தன்
வயது குதிக்கிறது!
தாய்ப்பாலை நான்குடித்து வளர்ந்ததனுல்
நாள்தோறும் பால்குடிக்க மறப்பதில்லை!
குழந்தை மனம் கொண்டவன் நான்!
இதனுல்தான் இரவில்...
நடுக்கூடம், படுக்கைஎன
நான், துரத்தப்படுகின்றேன்.
ஆனுலும்
மறுபடியும் திரும்பி
வருகின்றேன்!
கல்லறையின் கதைகளுக்கும்,
இல்லறத்தின் அமைதிக்கும்,
எல்லைகளை அளந்த
மனிதமனம் இங்கே!
என் வாழ்க்கை...
காலங்கள் மணக்கும் மலர்த்தோட்டம்!
கல்லறைக்கும் எனக்கும் வெகுதூரம்!

**காமுகன்**

அந்நியன்போல் உடையணிந்து,
அழகிகளின் இடை அணைத்து
சுவர்களுக்குள் விளக்கணைத்து...
சூரிய வெளிச்சம் வரும்வரைக்கும்
கைகளிலே கிடைத்த சுகம்—என்
காதலுக்குச் சுயசரிதம் (?)

**நா**

நாக்கின் கனவுகள் எல்லாம்
வார்த்தைகள் ஆகும் வசந்தகாலம்!
நிலவு முகம் பார்க்காத

நெருப்பு இலை மரங்களிலே...
எரியும் திராட்சை இதயங்கள்!

※※

மழை விழுந்த கல்லில்...
முளைத்த
காகித மலர்கள்!
அங்கே கனவின் நறுமணங்கள்!
பால்ய காலக் காதல்கள்
பாலைவனங்கள்!
இன்றைய காதலுக்கு
இரண்டு கால்கள் போதும்!
உடலுக்குச் சுவராகிக்
காற்றில் விழுந்த உடைகள்!
எல்லாம் முடிந்த பின்னே
மறுபடியும் ஆரம்பம் ஆகும்...என்
காதலுக்குள் மனித மிருகங்கள்!

※※

என் வைரம்
வியாபாரச் சந்தையிலே
விலைபோகவில்லை!
கண்ணாடிக் கல்வாங்கி
வைரம் என்று விற்றேன்!
கண்கவரும் மாளிகையில்
தூங்குகின்றேன்!
குரல்களைச் சுவாசிக்கும்
மதுஉலகக் குடும்பம்!
கனவுகளை ரசிக்கும்
உன் கவிதை முகம்!
கட்டிலறை இருக்கும்வரை—நான்
கல்லறைக்கு வரமாட்டேன்!

※※

தலையாரி
(மயான வேலைக்காரன்)

நினைவுகளில் வாழும்
அழகுகளை ரசிக்கின்றேன்!
நிழலாகும் போது
மனிதர்களைச் சுமக்கின்றேன்.
ஆனந்த வீதிகளில்
ஆரம்ப நாட்களிலே...
இலையில்லா மலர்களைப்போல்
இதழ்கள் திறந்தவரே!

⁂

முதுமை இருள்களிலே...
இளமைக் கனவுகளில்
முகங்கள் அணிந்தவரே!
ஆனால்...
கடல்நீரை விழிஏந்தி
நடைபோடும் வாழ்க்கை எல்லாம்
என் தீயில் எரிகிறது.
இது
கல்லறை அல்ல...
காலத்தின் கண்ணீர்க் கவிதை!
நெருப்பைத் தீயென்று சொல்லுங்கள்
ஆனால் அது—என்
தீபத்தின் விசுவரூபம்!

⁂

புதைகுழிக்குள் விழுந்த
உங்கள்
புகழ் விதைகள்...
கிளைவளர்த்து மரமாகிச் சந்ததிக்கு
நிழல் கொடுக்க
வர வேண்டும்

நானே... இங்கே
புதைகுழிகள் வெட்டும்
தலையாரி!
மனிதப் புதையல்களை
எரிக்கும் தொழிலாளி!
நெருப்பே நீஎன்
இருட்டுக்குத் தீவட்டி!
விறகே நீ என்
"முரட்டு மெழுகுவர்த்தி!"

⁂

## ஊமைச் சதங்கை

[கோடைக் காலத்துப் பகல் நேரம்...வேப்ப மர நிழல் களில் இளைப்பாறும் கிராமியக் கலைஞர்கள்...அது ஒரே வீதியின் இரு பக்கத்துக் குடிசை வீடுகளுக்குள் ஒரு குடும்ப மாக வாழும் தாழ்த்தப்பட்ட மக்களின் பறைச்சேரி]

மழை விழுந்தால் குளமாகும்
வெயிலடித்தால் குடைபிடிக்கும்!
அழுக்கான பழங்கூரை!
அதற்குள்ளே...
பரம்பரையாய் அடிமைத்
தலைமுறைகள் வாழ்ந்துவரும்
பறைச்சேரி நான் சாமி!
ஒரு வீதிக் குடிசைகளின்
ஒரு கோடிக் கதைகளிலே
ஒரு கதையைச் சொல்லுகிறேன்!

**

தொட்டாலே உதிர்ந்து விடும்
"மஞ்சள்பூ கருவேலா மரங்கள்"
காவலுக்கு நின்றிருக்கும்.
கட்டெறும்புப் பொட்டலிலே
முள்ளும் வளர்த்தபடி

காற்றில் அசைந்தாடும்!
"குருவிப் பிசின்" என்னும்
இனிப்பில்லா வெள்ளைக் கற்கண்டு
கால்முளைத்த சிறுவர்களின்
கடைவாயில் ஒதுங்கித்
திண்பண்டம் ஆகும்!
அங்கே...இடையிடையே
ஆள் தூக்கும் கோடைக்காற்று
அடிக்கும் சிலநேரம்...
ஊமைச் சதங்கையைப் போல்
உருவமுள்ள காய்கள்
உதிர்ந்துவிழும்!

⁂

ஊமத்தம் பூவொன்று
குயிலாக ஆனதுபோல்
ஊதும் நாதஸ்வர ஓசையிலே...
மனக்காயச் சுவடுகளை
மறப்பதற்குப்
பத்து விரல்களிலும்
கட்டுக்கட்டி...
கொட்டுமேளம்
கொட்டி,
பாதத்தில் சதங்கை கட்டிக்
கரகம் சுமந்தபடிச்
சதிராடும் கூட்டம்
ஒன்று...எங்கள்
சந்ததியின்
கலைஞானம் பூத்த
நந்தவனம்.

⁂

மங்கை ஒருத்தி
பூப்படையும் சடங்கிற்கும்...
மரணத்தில் ஒருவன்
சருகாகும் இழவுக்கும்
மாங்கல்யக் கல்யாண
முகூர்த்தத்திற்கும்...
ஊர்தோறும் சென்று
ஆடிப்பாடும் மனிதர்கள்...
நாதஸ்வர போதையிலே
இரவைப் பகலாக்கி
கிராமத்தைச் சொக்கவைக்கும்
கால் சதங்கைத்
தேனீக்கள்!
கரகத்தைச் சுமக்கும்
கலையழகில்...
நரகத்தில் சுவர்க்கம்
படைப்பவர்கள்!
ஆலமரத்தின் மேல்
விழுதையே எடுத்துக்
கூடுகட்டும் குயிலைப் போல்
ஆறடிக்கும் மேலே
வளர்ந்த முடி எடுத்து
அழகாய் ஒரு கொண்டையிட்டு
ஆடப் பிறந்தவர்கள்!

⁂

கொசுக்களுக்கு
ஈமத் தீயாக
எரியும்...
தீப தேவதையாம்
''பெட்ரோமாக்ஸ்'' வெளிச்சத்தில்
சந்தனப் பொட்டு வைத்து
வட்டமிட்டுப் பாடும்
கிராமத்துப் பாடகர்கள்...

குரல் கொடுத்தால் குயில்கள்...
கொஞ்ச நேரம் மௌனத்தில்
அசைந்து ஆடினால்
அவர்கள் மனித மயில்கள்!

⁂

அவர்களுக்குள் ஒருவன்
இரவில் பெண் ஆவான்!
வீணைக்கு நரம்புபோல் — கையில்
விளையாடும்
கருவளையல் அசைத்து...
தூணுக்குச் சேலை கட்டி
வைத்தது போல் திரியாமல்...
துரும்புக்கும் காதல்வரச்
சேலைகட்டி ஆடும் அழகன்!
சேரிக்குள்...
வேப்பமர நிழல் ஓரம்
சாயாக் கடை நடத்தும்
ராவுத்தர் தன்னுடைய கண்போலக்
காக்கும் கலைத்தூதன்!

⁂

கருட வாகனம் நீட்டும்
கையிரண்டில் தீபம் வைக்கும்
பெருமாள் கோவில்
சித்திரைத் திருநாளில்
எங்கிருந்தோ அவரோடு வந்து...
எங்கள் கலைஞர்களின்
தெருக்கூத்தில் ஆடிப்
பறைச்சேரி மகன் ஆனான்.

⁂

கால்சதங்கை ஓசையிட
வேர்வை முத்துப் பூக்கும்

கன்னத்தில் ஒற்றும் அவன்
கைக்குட்டைத் துணியைக்
கண்களிலே ஒற்றக்
காத்திருந்தார் சீமான்கள்.
ஒயிலாய் நடந்து
ஒரு கையை அபிநயித்து
கரகத்தை அவன் எடுத்தால்—காதல்
கிறுகிறுப்பில் பலர் இருப்பார்!
இடையை
அசைத்து—ஒரு
குடைராட்டினம் போல்
சுழன்று...
கிழவர்களைக் குழந்தைகள் போல்
துடிக்க வைப்பான்!
பாவாடை ஓரத்தை
மட்டும்
எடுத்து விசிறி
இளம் சிரிப்பைத்
தூதுவிட்டு
நடக்கும் அழகுகள்...
அங்கே...நாண வெளிச்சங்கள்!
அப்பப்பா!
பிரமன் இவனைப்
பெண்ணாய்ப்
படைத்திருந்தால்
கன்னியரும் ஆணாவார்!
"கண்ணே" என அழைப்பார்!

xx

இரவெல்லாம் இவன்
ஆடிக்கொண்டே இருந்தால்
கல்யாண மாப்பிள்ளை

முதலிரவை மறந்துவிட்டு
வேடிக்கை பார்ப்பார்!

✻✻

எங்கள் சரித்திரத்தின்
இருண்ட பகுதிகளில்
எத்தனையோ ... தலைமுறைகள்!
எத்தனையோ ... சம்பவங்கள்!
முன் நாளில் ...
சமைந்த இளம் பெண்கள்
சாமைச் சோறாகி
ஊருக்கே விருந்தான—சோக
ஊர்வலத்தைப் பார்க்கின்றேன்
தவழ்ந்து விளையாடி
தாய் இடுப்பில்
உயிர்க்குடமாய் மாறி
தரைமீது "பிறவி"யெனும்
நோய்ப்படத்தின்
கிறுக்கலைப் போல்
நூறுமுறை தள்ளாடி ...
வாய்க்கு ருசி பலதேடி
வாலிபத்தைப் பாழாக்கி ...
வாய்க்கரிசி பெற்றழிந்த
வாடிக்கை மனிதர் இங்கே
கோடானு கோடி!
அந்த ...
வெறும் மனிதர் கூட்டத்தில்
ஒரு மனிதன்போல்
இவன் வந்தான்!
ராகத்தின் உறவுகளில்
நாட்டியத்தின் கனவுகளில்
வேகமுறும் இரவுகளில்
"மோகினிபோல் ஆளானான்!

பகல் தூக்கம் முடித்து — இவன்
பாதை வழி போனால்
சுகமான கிண்டல்கள்...காதல்
அபஸ்வரத்தின் கீதங்கள்!
தெருவெல்லாம்
பார்த்தேங்கிப்
பெருமூச்சு விடும் இவனின்
பேரழகைப் பெண்ணாக்கி!

⁂

இன்றோ...
கருவேலி நிழல் ஓரம்
கால் சதங்கை தனியாக
இவன் மட்டும் அங்கே
ராவுத்தர் ... நேற்று ...
இறந்த நினைவுகளில்
இதயம் அலைவீச
சிலைபோல நிற்கின்றான்!
கூட்டுக் கலைஞரெல்லாம்
தூங்கும் இடம்விட்டு
கோடியுக சோகத்தை
ஓரவிழிப் பார்வையிலே ஓடவிட்டுத்
துடிக்கின்றான்!
ராவுத்தர் நினைவுகளே
மாவுத்தன் ஆக
மதம் பிடித்த மனயானை ...
பழங்கதையின் வழியெல்லாம்
அலைவதனால்
அழுகின்றான்!

⁂

சிறைச்சாலை ...
அங்கே ...
நெல்லும், மண்ணும்
கலந்த சோறு!

''மண்ணில் இருந்து
நெல் விளையும்'' என்றும்
''நெல்லில் இருந்து
உணவு வரும்'' என்றும்
உண்மைகளைப்
படம்பிடித்துக் காட்ட—ஒரு
கலப்படமாய் ஆன
சிறைச்சாலைச் சோறு!
அதோ! அவனுடைய
இரவுக் கூடு!
அங்கே . . அவன்
உண்ணுமல், உறங்காமல்
ஒரு கைதியாக
இருந்தபோது . : .
ராவுத்தர் வந்தார் !
சாத்துக்குடி ... திராட்சைக்கனி
தயிர்ச்சோறு தந்தார்!
அவன்
குளிப்பதற்கு நீர் சுமந்து
கொண்டு வந்த குடத்திற்குள்
அவர்
''சந்தன சோப்'' ஒன்றை
அப்படியே போட்டு
வைத்திருப்பார்!
மணக்க ... மணக்கக்
குளித்த கதையெல்லாம்
ஒரு மரணத்தில் முடிந்ததுவோ?
அவர் ... அலிமரைக்காயர்
அவனே
பகலில் ஆணாக இருந்தபின்
இரவெல்லாம் பெண்ணாகி
ஆடல் கலை வளர்த்தான் !
இதோ! இங்கே ...
இரண்டும் கெட்டானய்

ஆன மகன் நடக்கின்றான்!
அவன் ...
எங்கேயோ போகின்றான்.
கால் போன வழிநடந்து
கண்ணீரை
உதிர்த்தபடி போகின்றான்!
பாலூட்டும் தாய்போல் இருந்த
பறைச்சேரியின்
பார்வை படும் இடம்விட்டுப்
போய்விட்டான்!

✠✠

அதோ! அங்கே ...
கருவேலி நிழல் ஓரம்
அவனுடைய
கால் சதங்கை கிடக்கிறது!
ஆள் தூக்கும் கோடைக் காற்றில்
அதன்மேலே
கருவேலங் காய்கள் எல்லாம்
உதிர்ந்து விழுகிறது! ✠✠

# தாஜ்மகாலும் ரொட்டித்துண்டும்

அறிமுகம் :

''தாஜ்மகாலும் ரொட்டித்துண்டும்'' என்கிற இந்தக் காவியம் சில ஆண்டுகளாக என் மனத்தில் ஊறிக் கிடந்த கருவாகும்.

தாஜ்மகாலைப் பற்றி எழுதவேண்டுமென்கிற தவிப்பும், நிகழ்காலப் பிரக்ஞையும் ஊடாடிக் கலந்த ஒரு ரசவாதத் தலைப்பு இது.

இப்பொழுதெல்லாம் நான் எதை எழுதினாலும்...ஏழைகளின் துயரங்களைப்பற்றியும், அவர்களது சாகாவரம்பெற்ற பிரச்சினைகளைப் பற்றியும் சில வரிகளாவது என்னால் எழுதாமல் இருக்க முடியவில்லை. இதற்குக் காரணம் எனது வாழ்காலத்தின் நெஞ்சோடு நான் எழுதுகிறேன் என்பதைத் தவிர வேறொன்றுமில்லை.

ஒரு கல்லூரியின் பசுமையான தென்னந்தோப்பின் உள்ளிடத்தில்...ஒரு கிராமத்தின் ஏகாந்தமான ஓடைக்கரையில்...எத்தனையோ இடங்களில் என் மனக்கனவாக வளர்ந்து கொண்டிருந்த ஒரு தேவதையை நீங்கள் தரிசிக்கப் போகிறீர்கள்! தேவதை என்றால் அரூபமாகவும்...மூலாக்னியாகவும் என்னில் கவிச்சுடரேற்றி, எனக்குள்ளேயே கனவு

காணும் தேவதை அவள்! காமுகர்களை வெறுத்துப் பசிகாரர்களை நேசிக்கும் எனது தேவதேவியாகிய தேவதை.

எனது கவிதைத் தொகுப்புகளை வெளியிட்டு விட்டு, அடுத்த அடியை நிதானமாகவும், தெளிவாகவும் எடுத்து வைக்க வேண்டுமென்ற முடிவில்...எனது கனவுகளையெல்லாம் ''ரிஷிபத்தினி''களாக்கிக் கொண்டு, மனம் என்கிற ''பர்ண சாலை''யில் நான் தவமியற்றிக் கொண்டிருந்தபோது எனது தவத்தைக் கலைத்து விட்டன சமதர்ம முகங்கள் இல்லாத இந்தச் சமூக முரண்பாட்டின் எரியும் பிரச்சினைகள்.

இதோ...இலட்சிய வெறிமிகுந்த எனது பேனாவோடும், துடிதுடிப்பான மனமோகனக் கனவுகள் தாலாட்டும் நெஞ்சோடும் நான் மீண்டும் எனது பணியைத் தொடங்கி விட்டேன்.

காவியம் என்கிறபோது, இந்தக் காலத்து வாசகர்களுக்குப் புரிகின்ற எளிய நடையில், நானே அமைத்துக் கொண்ட சக்தி மிகுந்த புதிய முகமுள்ள கவிதை உருவத்தில் இந்தக் காவியத்தைப் படைத்துள்ளேன் என்பதை நீங்கள் மறந்துவிடக் கூடாது.

இங்கே தன்னேரில்லாத் தலைவன் இல்லை. நாட்டு வர்ணனை, நகர் வர்ணனைகள் இல்லை.

நமது காலத்தில் வாழ்க்கைப் பிரச்சினைகள் தாஜ்மகாலைக்கூட என்ன பாடுபடுத்தியிருக்கின்றன என்பதைத்தான் இதில் நீங்கள் பார்க்கப் போகிறீர்கள்

## முன்னுரை :

(ஷாஜஹானுக்கு மட்டும்)

ஓ...ஷாஜஹான்! பிணம் தின்னும் மண்மாதாவின் அடிவயிற்றிலிருந்து கொண்டு நீ பேசுவது எனக்குக் கேட்கிறது!

நீ அமைதியாக உறங்கு! உன் மனம்சலனமுற்றுக் குமுறி யழும்படி பெரிதாக இங்கேஒன்றும் நடைபெற்று விடவில்லே. உனது காதலிக்காக நீ கட்டிய ''கனவு மாளிகை''யை நான் ரொட்டித்துண்டுக்குச் சமமாக்கி விட்டதாகக் கருதுகிருயா? ஷாஜஹான் சக்ரவர்த்தி! தங்கள் காதலியர்க்கு ரொட்டித் துண்டுகூடத் தரமுடியாத இளம் ஷாஜஹான்கள் இந்த பூமியில் எத்தனேயோ பேர் இருக்கிருர்கள் என்பதை நீ அறி வாயா? வேண்டுமென்ருல் நீயும் இந்தக் கதையைக் கேள்!

சந்திரனர் தலேமறைவில்
சாகாத கருக்கிருட்டின் புறவெளியில்,
தேவலோகக் கொசுக்களேப் போல்
தெரிகின்ற நட்சத்ரக் கண்சிமிட்டில்...
அங்கொருவன் வருகின்ருன்!
ஆத்மாவின் ஆணழகன்
அதோ ஒருவன் வருகின்ருன்!

✠✠

இளம்விடியல் சாளரங்கள்,
இன்னும் திறக்காத
திசைச்சுவரின் இருட்டறைக்குள்,
திரிகின்ருன்!
நரகத்தின் சாயல்களும்
நதிப் பிணம்போல் சாக்கடையும்...
நாற்றிசையின் மடிவிட்டுக் கீழிறங்கித்
தாவரப் புழுதியெனும் கூரையிலே
தவழ்ந்து விளேயாடி...
ஓசையிடும் பூங்காற்றும்,
உயர்ந்து விட்ட முள்மரமும்,
குடிசைகளின் உள்ளிடத்தில்...
''மனக்குகையின் ஓவியங்கள்''
மன்மதனர் முகத்திரையில் இடம்பிடிக்க...
துள்ளிவரும் வாலிபங்கள்

தொடுங்காதல் கனவுடனே...
கொசுக்கடியும் ஈக்கடியும்...
இருக்கின்ற சிற்றூரில்
பூசணியின் கொடியருகே
நாய்க்குலவை...

⁂

முன்கனவின் பிசிருக
மூலத்தின் நிழலாக...
வேர்ப்பலாவின் நிழலடியில்
விளாமரத்தின் கிளைக்குக்கீழ்...
உன்னிப் பூத்தேனெடுத்து
உதட்டின் களைப் பகற்றி
ஊரோரச் சேரியிலே உலவுகிருன்!

⁂

இரவே! உன் கண்ணடிகள்
இனிப் போதும்! போதும்!
இவன்! உனது அகலிகைக்குக்
காம விழா வேந்தன்.
இரவே! உன் வெண்ணிலவு
இனியேனும் எழுக!
இவன்! அவனின் ரோகினிமேல்
மோகமுறும் மாந்தன்!

⁂

பூமியிலே இவன் கால்கள்...
வானத்தைத் தொடும் கைகள்!
எப்போதும் புதுக்கனவு காணும்...
ஏழைக் கவிஞன் இவன்!

⁂

இமயமலை காலடியில்
வந்துநிற்கும் — இவனே

இருவிழியில் கங்கைநதி
சிந்துகின்றான்!

⁂

உதயத்தின்
கடைசிக் கனவுமலர்...
வெண்மேகக் கூந்தலின்
ஒற்றை ரோஜா...
உதிர்ந்து விழும் மாலையிலே...
அஸ்த மனம் பூப்பூவாய்
மலர்ந்து
சுடுகாட்டுத் தீயாகி...
சுடர் மயங்கி...
சாம்பல் சரித்திரமாய்
பூமிக்குத் திரைபோட...

⁂

மலர்களும், பறவைகளும்
மனிதர்களும்...
இரவு வரும் வழியில்
இருந்தார்கள்!
இரவு, ஒரு சிறுகுழந்தை
பலருக்கு...
இன்னும் சில பேர்கள் ...
இரவுக்கு, அவர் அடிமை!
கவிஞர்களும்காதலரும்
கறுத்திருந்த
இருளுடன் ஓர்
இருளானார்!
இதயத்தில் ஒளியேற்றி...
இடையிடையே விழிமூடி...

⁂

வானவில் ஏணியில் ஏறும் மனதுக்குள்
மேகப் புழுதிகளோ?—அதில் ஒரு

முத்துப் புஷ்பிணியோ?—அவளது
மோகம் பவுர்ணமியோ?
வானக் கடலுக்குள்
உப்புக்கல் முத்துப்போல்
வந்து குவிந்ததுவோ?—அந்தியில்
வைரம் விளைந்ததுவோ?—நட்சத்ர
வாரம் பிறந்ததுவோ?

⁂

நெருஞ்சிமுள் காட்டிலோர்
நிஷ்டைப் புதுமலர்
நிலவெனும் தாமரையோ? — அவள்
உலவிடும் சாமரமோ? — இல்லை
ஊர்வசியாள் முகமோ?
நெருப்பின் கர்ப்பத்தில் இருந்து மெருகேறி
நீந்தும் குளிர் மலரோ?—வான
வேந்தன் அரியணையோ?

⁂

சேறுகள் மேகங்களோ? — அங்கே
சித்திர மின்னல்களோ?—மழை
முத்திரைச் சாட்டைகளோ?
மின்மினிக் கண்படும்
கிண்கிணித் தென்றலோ?—காற்றின்
மௌன நடை லயமோ?
செங்கனி வெண்ணிலா
தரங்கிணி போல்வரும்
சித்திரைப் பௌர்ணமியோ?
புத்தனின் மௌனங்களோ ?
யுத்த நெருப்புகளோ?—அதில்
மேகப் புகை வீச்சோ—மின்னல்கள்
வைர விறகுகளோ?

இரவே! நீ சாம்பலடி!
நட்சத்ரப் பல் விளக்கி,
எழுந்தது விடியலடி!
எங்கும்! சலனமடி!

ဳ

பொழுது விடிந்ததுமே
புறப்பட்டு உழைப்பவர்கள்...
நெற்றி வேர்வை வரம் கேட்கும்
நிலம் எல்லாம் புறம்போக்கு!
அடுப்பெரிக்க விறகில்லை!
ஆனாலும் குருக்களெல்லாம்,
மன்மதனைச் சிவன் எரித்த
மதக் கதையை விடவில்லை!

ဳ

தாஜ்மகாலைக் காண்பதற்குத்
தடம் போட்டு ரயில் ஓடும்
வழிப்பாதை ஊர் இதுதான்!
காஷ்மீரப் பனிக்காற்றில்
கதறி அழும் உயிர் போலக்
கவலைகள் வாழும் இடம்.

ဳ

அரண்மனைபோல் வீடுகட்டி...
யானைபோல் அசைந்து வரும்
மனைவிக்கு வீதிகட்டி...
வட்டி பெறும் சீமான்கள்...
வெளிநாட்டில் இருந்து,
இறக்குமதி செய்த
வியாபாரப் புயல் காற்றில்...
விலை போகும் கிராமம்!
விசிறிபோல் தென்னைமரம்
விளையாடும் நந்தவனம்!
வியர்வை சிந்தி உழைப்பவர்கள்...

விடியல் குளியலுக்கு
வாளிகளைத் தொட்டுவிட்டால்...
ஆளுக்குப் பத்துபைசா!

✻✻

வட்டக் கிணறுகளில்
நீராட வரும் கவிஞன்
கட்டழகி ஒருத்தியினால்
காதல் கனவானான்.

✻✻

தாய்வானின் மடியினிலே
தவழ்ந்து விளையாடும்
சந்திரனும் சூரியனும்
சகோதரர்கள் ஆவார்கள்.
எந்த மதம் ஆனாலும்
இந்தியாவில் பிறந்தவர்கள்...
இந்த மண்ணின்
குழந்தைகள்!
ஒரு நாட்டின் நதிநீரை,
ஒரு தாயின் பாலாக
உண்டு வளர்ந்தவர்கள்.

✻✻

இருளில் முகம் பார்த்துத்
தடுமாறி நின்றாலும்...
விடிந்தால் "சுகம்தானா?"
எனக் கேட்டு ஒன்றுவார்!
ஏழைக் கவிஞனுக்கு
இந்து மத ரத்தமாம்!
முந்தானை முகம் மூடும்
மலர் அரசி முஸ்லீமாம்!
மன்னிப்பும், வாழ்த்துகளும்
வாழ்க்கை தரும் சீதனங்கள்!

மதவெறிகள் சருகானல்—பாச
மலர்க்காட்டின் வாசனைகள்!

⁂

அவள் வீட்டுக் கதவோரம்—அவன்
கவிதைகளைப் பாடுகிருன்—அவள்
கண் திறந்து கண்மூடிக்
காதலுக்கு உயிர் தருவாள்.
பாதிக் கனவு விழி
போதைக் கதை எழுதி—அவள்
பாதம் பட்ட இடம்
பட்டு மெத்தைத் தொட்டில்!
விழியே ஒரு தேவசபை!
விழிப்பே அவள் சங்கீதம்!

⁂

[புகைவண்டி நிலையத்தின் அருகில்......வேப்ப மர நிழல்கள்...தேநீர்க் கடை...கவிஞன் அங்கே வருகிருன்...கடையில் யாரோ சிலர் ரொட்டித் துண்டுகளைத் தேநீரில் குளிப்பாட்டி உணவாக்கும் பகல் நேரம்! கடைச் சுவரில் ''காலண்டர் கவிதைபோல்'' தாஜ்மகாலின் சித்திரம். கவிஞனும், பசியும், கனவுகளும் அங்கே ஒன்ருகி இருந்தார்கள். தாஜ்மகாலின் ஓவிய நிழலை ரசித்தபடி...வெயிலுக்கு வந்து, அவன் ரொட்டித் துண்டுகளைப் பார்க்கிருன். சோசலிச ரோஜாக்கள் மனக்காட்டில் பூக்கிறது. ஒரு இதய்பாடல் எழுகிறது.]

தாய்நாட்டின் ஓவியத்தில்
குடிசைகள் உண்மைகள்!
கோவில்கள் பொய்கள்!
மனிதர்கள் அனைவரும்
புனிதத்தின் புத்தகங்கள்—அவர்

போர்க்குரல் பிறந்து விட்டால்—அங்கே
புது யுகப் பிரார்த்தனைகள்!

⁂

தூரத்து பார்வையிலே—அந்தச்
சூரியன்போல் உலகை—எந்த
நேரமும் பார்த்திருப்பேன்—அங்கு
சமத்துவத் தேர் இழுப்பேன்.
சுகங்களைத் திரைபோடும்—பல
முகங்களை நான் வாங்கி
சுதந்திர ஓவியத்தை—அங்கு
நிரந்தரமாய் வரைவேன்!

⁂

காற்றின் கடலோடு—ஏழையின்
கண்ணீர் முத்தாகும்—பக்தர்கள்
ஏற்றிய தீபங்களில்—ஏ!
இருளே! நீ போய் விளையாடு!

[யாத்ரீகர் கூட்டம்—பௌர்ணமி இரவில் தாஜ்மகாலைப் பார்த்துவரப் பயணம் புறப்பட்டு...புகைவண்டி நின்றதும் தேநீர்க் கடையில், தாகம் தீர்க்க வரும் நேரம். கவிஞனின் பாடல்களின்மேல் அவர்களின் காதுகள் காதல் கொண்டன.

''தாஜ்மகால் காலண்டர்'' கண்ணில் படுகிறது. ஆக்ராவின் பௌர்ணமி நிலவில்—அவனது கவிதைகளைக் கேட்க, கவிஞனையும் அவர்கள் அழைக்கின்றார்கள்.

புரட்சிக் கவிஞன்...யாத்ரீகன் ஆனான்]

கல்லறைக்கவிதை இது—பாடும்
யமுனா நதி ஓரம்...
கனவுகள் காணும் மனம்—ஒரு
மாளிகை ஆன இடம்!

⁂

ஆக்ராவின்
காலத்திரை மேலே...மன்னவன்
காதல் கதை முழுதும்...சிற்பியின்
ஓவியம் ஆன சுகம்—மும்தாஜின்
வாலிபப் பருவ முகம்.
சலவைக்கல் சித்திரத்தில்—அந்த
ஷாஜகான் காதல் மலர்
மரணத்தின் வர்ணங்களாய்
மாறிய சோலைவனம்!—இது
வாலிப மலர்காட்டில்
வசந்தத்தின் மௌன தவம்!
தாமரைப் பூக்களெல்லாம்—யானைத்
தந்தங்கள் ஆனது போல்...
பௌர்ணமி நிலவினிலே,
பனிநீர் தவழும் இடம்!
பூமியின் ..
அழகுத் தலைநகரம்!

[யாத்ரீகர் கூட்டம் கவிஞனோடு ஆக்ராவிற்கு வருகிறது. புகைவண்டியின் தாமதமான வருகைக்கு முன்னால், பௌர்ணமி இரவு விடை பெற்றுக் கொண்டது. பெண்ணழகி ஒருத்தி ரொட்டித் துண்டுகளை விற்பனை செய்கிறாள், பசிப்புயல் பெருமூச்சாக வெளிவருகிறது. யாரும் தாஜ் மகாலைப் பார்க்கவில்லை! கிழவன் ஒருவன் ரொட்டித் துண்டைப் பிய்த்துக் கவிஞனுக்கு தருகிறான். அந்த அரை ரொட்டித் துண்டைப் பார்த்து அவன் ஆனந்தக் கண்ணீர் சிந்துகிறான். ஆகாயத்தின் அரை நிலவும் தாஜ்மகாலும்... அழகுப் பிணம்போல அங்கே அனாதையாய்க் கிடந்தன.]

# உதிரிப் பூக்கள்

## நரை முடிக்கு ஒரு தாலாட்டு

[நிலைக் கண்ணாடியின் முன்னால்...காதோரத்தில்...எனது முதல் நரைமுடியைக் கண்ட போது கிடைத்த கவிதைப் புதையல்]

எனது
வாலிப மாளிகைக்குள்...
கண்ணாடி ஜன்னல் வழியாய்
நுழையும் அந்நியனே! யார் நீ?
சாயத்தின் ஒப்பனையில்
நிறம் மாறித் தூங்கி விடு!
பருவத்தின்
திராட்சை ரசக் கோப்பையிலே...
மரணத்தின் இதழ்களில்
நீ! உறிஞ்சுகுழல்
இளமை என்னும்
கருநீல ஏரியிலே...
யார் வீசும்
முதல் தூண்டில்?
மலட்டுக் கனவுகள்

பிள்ளை வரம் கேட்டு...
வாலிபத்தின் கிளைகளிலே
கட்டி வைத்த தொட்டில்
நீ !
எனது கறுப்புத்
தொப்பியின் மேல்...
கிழிசலாய்
உட்கார்ந்து கொண்டு...
ஒரு
வைதவ்யச் சேலைக்கு
நீ ! ஏன்
நூல் நூற்கிறாய்?
என்
இளமைப் புதைகுழி மேல்
பால் தெளிப்பாய்...
கிழட்டுப் பறவையிட்ட
எச்சமாய்...
தலை மேல் வளரும்
சுடுகாட்டுக் குப்பையாய்—
நீ ! முகம் காட்ட வேண்டாம் !
சாயத்தின் ஒப்பனையில்
நிறம் மாறித் தூங்கி விடு !
எனது
வாலிப மாளிகைக்குள்...
கண்ணாடி ஜன்னல் வழியாய்,
அந்நியனே! நீ வர வேண்டாம்!

## முதல் காதல்

கருவேலி நிழலுக்குள்,
காலங்கள் பறந்தோடக்
கதை பேசித் திரிந்தோமே!
ஊருக்கு மேற்கே...
நந்தவன மாமரத்தின் கீழே
உட்கார்ந்திருந்தோமோ...
எங்கே டீ போனாய் ?
எங்கே நீ போய் விட்டாய்!
மயிலிறகு வைத்துப்
புத்தகத்தில் அடை காத்து...
சூரிய காந்திப்
பாத்திக்கு நீரூற்றி...
பால்யத்தில் சிரித்தோமோ!
எங்கே டீ போனாய்?
எங்கே நீ போய் விட்டாய் ?
புல்வெளியில் நடந்து
குளம் கடந்து...
காலடியில் நெருஞ்சி முள் தேய்த்து,
காற்றுக் குவியலிலே
கால் பதியும் அந்த
ஊர்கோடி மணல் மேட்டில்
உட்கார்ந்திருந்தோமோ!
எங்கே டீ போனாய்?
எங்கே நீ போய் விட்டாய்?

## வியர்வை

வெப்பமுள்ள நீர்த்துளி நான்! வாகை வேந்தன்
வீரவாளில் வசித்ததுவாம் ரத்தம்! நானே
குப்பத்தின் ஏழைமக்கள் மேனி மேல் என்
குடியிருப்பை அமைத்துள்ளேன்! அழுக்குத் தோல்கள்
துப்புகின்ற எச்சில் நான்! உடலின் கூட்டைத்
துண்டித்துக் கொள்கின்ற துறவி நான் தான்!
கொப்புளித்துக் கொண்டிருப்பேன், வெயில்
காலத்தில்...
கொஞ்சநேரம் விட்டு வைத்தால் அழுக்காய்ப்
போவேன்
நோய்பிடித்த உடல்மேலே ஆசை வைத்து
பாய்விரிப்பின் மேல் விழுவேன்! பொதுக் கூட்டத்தில்
வாய் பிடித்த, படி அளந்து கொண்டிருக்கும்
வம்பளப்புப் பேச்சாளர் முகத்தை, ஓடிப்
போய்ப் பிடித்துக் கொள்வேன் நான்!
மழைக்காலத்தில்
“பொடி” மூக்கைச் சளிபிடித்த கதையாய்! ஆசைத்
தாய்பிடித்த படியிருக்கும் குழந்தை மேலே
தவழுங்கால் புடவையினுல் மரணம் ஆவேன்!

## பூக்காரி

உன்...
மாலை அபிநயம்
மேற்குத் தெருவினில்
ஆளை மயக்குது பூக்காரி—நீ! மலர்
அம்பறுத் தூணியோ பூக்காரி?

மங்கை உன் கன்னத்தில்,
மச்சத்தில் பொட்டு
வைத்தவன் மன்மதன் — நீயவன்
மச்சினியோ டீ பூக்காரி?

ஒத்தைப் புகையிலைத் துணுக்கிலே
வெற்றிலை குதப்பி—நீ
ஓரடியால் ஊரளக்கும் கைகாரி!

கூப்பிடு வாசலின்
யாத்திரைக்காரி—உன்
குடும்பம் என்றாகிய
சோலை விட்டோடிய
"குங்கும வண்டை"—நீ
கூப்பிடுகின்றாயோ
பூவிலை கூறி?

ஊருக்கு மணக்கும்
உற்சவப் பூக்கள்
உனக்கு மணக்குமோ பூக்காரி?

## நயாகரா !

வெண் நிலவில் கால் பதித்த
விஞ்ஞானத் திருநாட்டில்...
உலகத்தின்
செல்வத் தலைநகரில்...
சிரிக்கும், ஏ! நயாகராவே!
நீ! மலை மேலே இருந்து...
வெறியோடு விழும் அருவியா?
இல்லை... அந்த
வெள்ளையரின் நிறவெறியா?

## நானும் என் மச்சினியும்

குச்சு நடுங்குது! கூதல் அடிக்குது!
குளிர் மழை பேயுது மச்சினி ! — என்னைக்
கூப்பிட்டுக் கொள்வாயா மச்சினி ?
அக்கா தங்கச்சிமார்
அழகை வரம் வாங்கி, நீ ஏன்
முக்காடு போட்டுக் கொண்டாய் மச்சினி ?
முந்தானைச் சிந்திலே
பந்தாடப்பட்டவர்
மூர்ச்சை தெளியவோ மச்சினி ?
பருவத்தின் மேல் விழும் மன்மத தேவனின்
பாணம் உதறி நடக்கும் மச்சினி—ஒரு
பால்யத்தின் முற்றத்தில் பூவிதழ் சொரிந்திடும்-காதல்
பாஷைகள் மலர்த்திய மச்சினி!
கன்னத்திலே விழும் நாணக்குழிகளில்—முனிவனின்
''காம சூத்திரம்'' எழுதிய மச்சினி!
கால் நடையாகவே பாதச்சலங்கை கொண்டு—
பூமிக்கு
கானங்கள் சாற்றிய மச்சினி?
ஒச்சங்கள் அற்ற உன் உடல்மலர்க் காட்டிலே
கிச்சங்கள் மூட்டவோ மச்சினி—நீ
வெட்கங்கள் ஏந்திய காதலின் பாதையில்—உன்
பக்கத்தில் ஆடவோ மச்சினி ?
குச்சு நடுங்குது! கூதல் அடிக்குது!
குளிர்மழை பேயுது மச்சினி — என்னைக்
கூப்பிட்டுக் கொள்வாயா மச்சினி?

## வீரவணக்கம

சரித்திர வீரனுக்கு
நினைவு நாள்!
கவியரங்கம்
பட்டிமன்றம்...ஒரு பக்கம்
கஞ்சிக் கலயம்
பசிக்கலகம்...மறு பக்கம்

காகிதப் போர் வாள்கள்,
தாய்நாட்டின்
எல்லைகளைக் காக்குமா?

கட்டுச் சோற்றை நம்பி,
வயலில் விதைக்க மறந்து விட்டால்...
அறுவடை நாள் வருமா?

மறத்தி ஒருத்தி...
காயவைத்த தானியத்தை
மேய வந்த கோழிகளை...
காதில் அணிந்திருந்த
பொன்தோடு கழற்றி
வீசி...எறிந்து விரட்டினாள்
இது இலக்கிய வர்ணனை!

கறுப்பி...ஒருத்தி
தரை மீது காயும்
தானியத்தை மேயும்...
கோழியைப் பிடித்து
இறகைப் பறித்து...

ளிக் காதுக்கு...அதை
நகையாக்கி நடக்கின்றுள்.
இது வாழ்க்கையின் வறுமை!
''இன்றின்'' வெயில்கள்
''நேற்றின்'' நிழலுக்குள்
இளைப்பாற முடியாது!
இனிமேல்...
இறந்த காலத்திற்கு
வீரவணக்கம் வேண்டாம்!
இருப்பவனை வாழவிடுங்கள்!

## எங்கள் ஊர்க் குயில்கள்!

ஆத்தோரம் காத்தடிக்குதே!
ஆகாயம் மின்னல் வீசுதே!
ஆவாரங் காட்டுக்குள்ளே
அத்தை மகள் மின்னல்கொடி!
அடியெடுத்து நடந்துவாடி ...வா!
அரசிலைக் கொழுந்தே—என்
அவசர விருந்தே
கண்டாங்கிச் சேலைக் கட்டும்
கதிர் அரிவாள் நெல்லுக் கட்டும்
கண்டால் குறுகுறுக்கும்
கைவிரல் பத்தும்—உன்
கண்களைப் பொத்தும்.
கன்னங் கருத்த தோளும்,
கண்ணடியும், என்னை ஆளும்!
முன்னழகும், பின்னழகும்,
மூடுதிரை மேடழகும்...
முன்னாலே ஆடுதடி
வித்தாரக்கள்ளி—என்
மூச்சு முட்டிப் போகுதடி
முத்தாரப் பல்லீ!
அஞ்சு புளியமரம்
அதையடுத்தால் சோளக்காடு!
நெஞ்சு கரையிரேனே...
எஞ்சமத்துப் புரியலையோ?

# ஒரு மரணத்தின்முன் நினைவுகள்!

அந்நியன் நான்!
    யாரும் எனக்கிங்கே உறவில்லை...
அந்நியன் நான்!

வெட்டவெளிச் சாலையிலே
    விதி மரத்தின் ஊஞ்சலிலே,
சித்த சுகக் கூடுகட்டும்
    சிறு பறவை நானல்லோ!

சித்தசுகக் கூட்டிற்குள்
    சிறகு முளைக்காது!
சிறகு முளைத்தாலும்
    பறவை பறக்காது!

உயிர்வீதி வழி நடந்து
    ஊரெல்லாம நான் கடந்து
ஒற்றைக் கனவொன்றில்
    உள்ளொடுங்கித் தூங்குகிறேன்

ஒற்றைக் கனவிற்குள்
    உறக்கம் கலையாது!
உறக்கம் கலைந்தாலும்
    உயிர் இனிமேல் பிழைக்காது!

முழங்காலில் சுமைதாங்கி—என்
    முகம் திருத்திக் குளிப்பாட்டி

தொட்டிலுக்குள் தாலாட்டும்
    தொடர்கதைகள் முடிந்தாச்சு—நான்
தோள்வலிக்க அடிவாங்கித்
    தடியூன்றி முதிர்ந்தாச்சு!

கட்டில் அறை தேடிக்
    காதலித்த பொன்மயிலைக் காதலித்து
கரைந்து கரைந்து அழுதாச்சு—வாழ்க்கைக்
    கரையேறி மண்ணிலே நான் விழுந்தாச்சு

உற்றார் உறவென்னும்
    ஒரு கோடிப் பொய்க்கதைகள்
உதிர்ந்து விழும் நாளாச்சு!

ஊரோரம் தீமூட்டி
    ஓலமிட்டு அழுதாச்சு!

# என் கவிதையின் சுயசரிதம்!
(முன்னுரை மட்டும்)

காதலி! கவிதைக் காதலி!
கண்வழி ஏறி என் கனவினில் ஆடி—ஒரு
காமுகி யாகிய காதலி!
நான்
முற்றும் மலர்ந்திருந்தேன் —ஒரு
மோகக் கரைமேலே – மணம்
முதிர்ந்து முதிர்ந்திருந்தேன் —பின்
வெற்று நினைவெனும் பாழிலே – பொய்
வேஷ முகநட்பின் நாரிலே—
இற்று விழுந்து விட்டேன் —எனை
இழந்து உதிர்ந்து விட்டேன்.
கருவளை மோதிரக் கார் குழல் கொஞ்சலும்—இரு
கண்களில் மந்திர மன்மதன் மையலும்
ஒருத்தி சுமந்தெங்கள் ஊர்ப்புறம்
வந்து நின்ருள்—பின்
ஓடிய ஆண்டுகள் பலவும் வனப்புற
ஊர்வலமாக வந்தாள்
"காற்றின் மலைமகள்" என்னுமோர்
மணல் மேட்டிலே—"மாலைக்
கவிதை" என்ருகிய "சூரிய வீச்சிலே"
ஆற்றின் கரையிலே பின் அங்கோர்
தென்னந்தோப்பிலே—ஓர்
ஆயிரம் பிள்ளைக் கனவுகள், அவையெலாம்!
கோவிலில் விக்ரக வாசலில் பாடுவாள்! – பின்
கோடு கிழித்து நொண்டி ஆடுவாள்
போயின போயின அப் பொன்மகள்
நினைவுகள்—ஒரு
போதைக் கவிதைக் கிறுக்கனின்
பாலியக் கனவுகள்
காதலி! கவிதைக் காதலி!
கண்வழி ஏறிஎன் கனவினில் ஆடி—ஒரு
காமுகி ஆகிய காதலி!

## அந்நியன்

எங்கள் ஊர்த்தெருவில்...
விடியல் வெளிச்சம்
பிறப்பதற்கு முன்னால்
''பீடிப் புகையோடு...
வழியில் வருபவர்கள்
முகம் பார்த்து...
''வீதி நீச்சல்'' போல,
விலகி...விலகி, வழி நடந்து
வருகின்ற அந்நியனே!

ஓட்டாஞ் சல்லியின் மேல்
ஒற்றைக்கால் மிதிவைத்தே
பாவாடை தூக்கும்
சிறுமிகளைப் பார்க்காதே!
''மாராப்பு'' வாலிபத்தை
விழியாலே குடையாதே!

சாரல் மழை ஈரத்தில்...
குத்திருமல் ீட்டிக்
குடையின்றி ஏன் வந்தாய்?
''சுருளிமலைக்'' குளிருக்குத்
தாடி மட்டும் போதுமா?

# தாய் மாமன் கிராமம்

வட காற்று வீசிவர
வாகை மரம் சலசலக்கும்!
பொன் போல் உருகிப்
பொழுதிறங்கும் ஆகாயம்
மண் மேல் தெரிவது போல்
மாலை வெயில் பள பளக்கும்

கம்மாளர் தெருவில்
கடை போடும் வீதியிலே...
என் மாமன் மகளுடைய
இளம் பாதம் நடை துவளும்!

எல்லையிலே இளைப்பாறி
இலவ மரம் இரண்டிருக்கும்!
இலவைக் கிளி காத்த
ஏக்கக் கதை கட்டு,
இளகி மனம் உருகி—அங்கே
இளம் பருத்தி வெடித்திருக்கும்

ஆடியிலே விதைத்தாலும்
அறுவடைகள் நடந்தாலும்...
அரை வயிற்றுக் கஞ்சிக்கு
ஆலாய்ப் பறந்தபடி...
தண்ணீர்க்குடம் சுமக்கும்—எங்கள்
தாய் மாமன் கிராமம்.

## எந்த ராஜ வசந்தத்தில் இந்தக் கொடிகள் பூக்குமோ ?

எத்தனையோ வசந்தங்கள்
கற்பாந்த காலமாய்
இந்த வழி நடந்தாலும்
எங்கள் கொடிகள் பூக்கவில்லை!
அரும்புகளே உதிர்ந்து விட்டால்
எங்கள்
ஏழைத் தோட்டங்கள் எல்லாம்
வசந்தத்தின் முதல் மலரை
எப்போது சூடுமோ?
சரித்திரத்தின்
நாகரீகத் தலைவாசல்...
எங்கள் வேர்வைகளை மலராக்கி
விருந்தாடை மேல் சூடும்
ஆதிக்க வாதிகளின்
மலர்க்கண் காட்சித்
திருநாளின் நுழைவாசல்.
ரோமாபுரியோ, கிரேக்கமோ
சங்கத் தமிழகமோ...
நவீன ஏகாதிபத்தியமோ
எதுவென்றால் நமக்கென்ன?
அங்கே...
''பொற்காலம்'' வந்தபோது
அந்தச் சரித்திரத்தின் மறுபுறத்தில்
ஓர் இருண்ட காலம் இருந்தது!

சீசருக்கும், ஆண்ட்டனிக்கும்
கிளியோ பாத்ராவின்
உதடுகளே மதுக்கோப்பை!

⁂

உழைப்பவர்கள் வாழ்க்கைப் பாதை
அவர்களுக்கு வெறும் குப்பை!
அந்தக் குப்பை மேட்டில்
கோழிச் சண்டை நடத்தி
ரசிப்பது போல் அடிமைகளை
மல்யுத்தம் நடத்த விட்டு
அங்கே...
சிந்தும் ரத்தத்தில்
செவ்வான அழகு கண்டு
ரசனைகளை வளர்த்தவர் தான் — அந்த
ராஜாதி ராஜர்கள்!

⁂

ஆயிரம் அடிமைகளை உருவாக்கிச்
சாம்ராஜ்யம் படைத்தார்கள்!
அப்போது சில பேர்கள்
அந்த அடிமைகளைச்
சந்தையிலே விற்றார்கள்!
கண்ணிரண்டைத் துடைக்காமல்...
வெட்டி வைத்த கால்வாயில்
வேர்வையுடன் கண்ணீரை
பூமிக்கு நதியாக
அனுப்பி வைத்த மனிதர்கள்
அந்த அடிமைகள்
அரசர்களின் பிணம் தூங்க
பிரமிடுகள் கட்டி விட்டு

பாலைவன மணல் ஓரம்—அந்த
ஏழை மக்கள் பிணமானார்!

xxx

துறவிகளின் காவி உடைபோலப்
போர்வாளைச் சிவக்க வைத்து
ரத்தத்தில்...
ரோஜாப்பாத்தி கட்டி—பூமியிலே
விளையாடி வந்தவர்கள்
அரசர்களாய் ஆனார்கள்!
யானை மேல் ஏறி
அம்பாரி கட்டிப்
போராடும் அரசனுக்கு
ஓராயிரம் காவியங்கள்!
ஊரெல்லாம் நினைவு நாட்கள்
அதே போரில்...
அறுதை மலர் போல் உதிர்ந்து
கழுகுக்குப் பிணமான வீரர்களின்
கண்ணீர்க் கதையெல்லாம்
சரித்திரத்தின் இருட்டடிப்பாய்
இன்னும் இருக்கிறது!
"நடுகல்" வைத்து அவர்கள்
தியாகத்தை
நடைபாதை ஆக்கித்
தேர் ஏறிப் போனவர்கள்
தேசத்தை ஆண்டார்கள்!

xxx

மதவெறியர் குதித்தாடி
மனிதர்களைக் குறி வைத்து
புதைகுழிக்குள் சமுதாயப்
புலம்பல்களைப் புதைத்தார்கள்!
முன் நாளில்...
இந்து மதத் துறவியர்

இளமையிலேயே
துறவு கொண்டார்!
இந்நாளில்... இங்கு சிலர்
துறவிலேயே
இளமை கொண்டு—காதல்
தொடர்கதையை வளர்க்கின்றார்!

⁂

தேவாலயத்தில்
மெழுகுவர்த்திகள் எரிகின்றன!
சேரிகளிலே சிம்னி விளக்குகள்
அணைகின்றன!
பாவிகளை ரட்சிக்கத்
தேவனது ராஜ்யம்
திரும்பி வரும் என்கின்றார்!
இனிமேலே...
எந்த இடைத்தேர்தலில்
ஏசுநாதர் வந்து
போட்டியிடப் போகின்றார்?
புரியவில்லை சுவாமிகளே!

⁂

குரானின் அட்டையின் மேல்
வட்டிக் கணக்கெழுதும்
முஸ்லீம்கள் சில பேர்கள்
ரம்ஜான் பிறை பார்க்கும்
கண்ணில் இருள் வளர்ப்பார்!

⁂

எப்போதோ எங்கோ—சில
புத்த மதத் துறவிகள்
புலால் உணவு தேடும்
வேகத்தைப் பார்த்து...

புத்த தேவன் கூடத்
தோள் மேல் ஆட்டைத்
தூக்கி வைத்துக் கொண்ட கதை
தனியாகச் சென்று...
சமைப்பதற்குத் தானு?
என்று சிலர்
சந்தேகம் கொண்டார்கள்!

✕✕

பாக்டீரியா மரங்கள்
தென்றலுக்குத்
தலையாட்டி — இலைப்
பந்தலிடும் கட்டிடங்கள்!
அங்கே...சமுதாயச்
சிந்தனைக்குத் தொட்டில் கட்டும்
தொழிலாளர் கூட்டம்!
எத்தனையோ...
போர்க்கொடிகள் கண்டேன்!
எந்த ராஜ வசந்தத்தில்
இந்தக் கொடிகள் பூக்குமோ?
எங்கள் ராஜ வசந்தத்தில்
இந்தக் கொடிகள் பூக்கும்!

✕✕

# ஏகாந்தக் குரல்கள்

## விழிப்பு

உனது
புருவ நரைகளில்...
உன் காலம்
உதிர்வது தெரிகிறது!

காமம் "சமாதி" ஆகிவிட்ட
கண்களில்...
பார்வை
தடுமாறுகிறது!

ஆனால்
உனக்கு ஒரு
அழகான குழந்தை பிறந்திருக்கிறது!
உனது
மரணத்திற்குப் பிறகும்...
அந்தக் குழந்தையின்
ரத்த ஓட்டத்தில்
நீ விழித்திருப்பாய்!

## பழமை

உன்
கனவுகளின் சாளரத்தில்
நீ ஒரு
பொற்காலத்தை
தரிசித்தாய்!
ஆனல் அது
எப்போதோ...
கனவாகிப் போய் விட்ட...
பழைய பொற்காலம்!

## விண்ணப்பம்

ஒவ்வொரு கண்ணிலும்
தென்றல் வீச வேண்டும்!
ஒவ்வொரு நிமிஷத்தையும்
நாகரீகம் ஆள வேண்டும்!
காமத்தின் இலைகள் உதிர வேண்டும்!
அழகின் மலாகள் பூக்க வேண்டும்!

## கைதி

கண்ணாடிக் கோப்பையின்
நான்கு சுவர்களுக்குள்
"தண்ணீர்க் கைதி" யாக
இருக்கும்
மதுவை அருந்தி...
நீ ஏன்
ஒரு கைதியாக
மாறுகிறாய்?

## பாடப் படாத பாடல்கள்!

பாடிய பாடல்களில்
சோகத்தைக் காணுகிறேன் — என்
மௌன கீதங்களின்
சுகங்களில்
நான் வாழுகிறேன்!

## மழைக்காலம்

மழைக் காலத்தில்
முள்களை நரம்பாக்கி
மலர் வீணை செய்பவனே!
நீ மின்னலைச்
சிரிக்க வைத்தாய்!
ஆனால்
எங்கள் ஜன்னல்களின் ஓரம்
ஏன் அழுகுரல் கேட்கிறது?

## வறுமை

கவிஞனுக்கு...
"மலர் போன்ற உள்ளம்" என்றார்
அவன்...
செருப்பில்லாத காலோடு
நடந்து வந்து...
செங்கரும்புப் பொங்கல் பற்றிச்
சிறப்புரை ஆற்றினான்!

## ரோஜாக்கள் சாகாது!

நாம்
வசந்தத்தைப் பார்த்த போது...
''ரோஜாக்கள் சாகாது'' என்ருய்!
இந்த
இலையுதிர் காலத்திலே
நீ எங்கே மறைந்து விட்டாய்?
உன்
கண்களில் எரிந்த
காதல் நெருப்பிற்கு
நீ ஏன்
உன்னையே விறகாக்கிக் கொண்டாய்?
நீ
இந்த உலகத்தில்...
வெறும் பனித்துளிகளைக்
குடித்து விட்டு...
மயானத்திற்கு
ஏன் உணவாஞய்?
மறுபடியும்
வசந்தம் வந்த போது
நீ எங்கிருந்தோ
குரல் கொடுத்தாய்!
''ரோஜாக்கள் சாகாது'' என்ருய்!

## புது மாப்பிள்ளை

புது மாப்பிள்ளையைப் பார்த்து,
எது வேண்டும் என்றாலும்
கேளும்'' என்றார்...
இலட்சாதிபதி மாமனார்!
கரும்புக் கட்டைத் தொட்டபடி
கட்டை விரல் நகம் கடித்து
வெட்கப்பட்ட மாப்பிள்ளை...
''புதிய பல்செட் ஒன்று
ஊருக்குப்
போவதற்குள் கிடைத்தால்
போதும்'' என்றார்!

## சுரண்டல்

மாதாந்திரப் பேச்சாளரைப்
பார்த்து
''மத்திய நூலகத்திற்குப்
போகலாமா?''
என்று கேட்டார்
இலக்கிய விழாத் தலைவர்!
''மதுரை முனியாண்டி விலாசுக்குப்
போகலாம்'' என்றார்...
காலை ரயிலில்
சென்னைக்கு வந்த
பேச்சுக் கச்சேரிக்காரர்!

## நீதிபதி

"ஐ. ஆர்." 8-ல்
அவள் வைத்த
சர்க்கரைப் பொங்கலில்
பூச்சியைப் பார்த்த
"கோர்ட்டுப் பியூன்"
தானே நீதிபதியாகி
வயிற்றைத் தண்டித்தான்!

## கிராமத்துப் பண்டிகை

சந்தையிலே
தகப்பன் விற்ற
கிழட்டுப் பசுமாடு...
கசாப்புக் கடையில்
தோலுரிக்கப் பட்டபோது...
ஒரு கிராமத்துப் பண்டிகையில்
குழந்தைகளுக்கும்,
மனைவிக்கும்
கோடித் துணிகள்
கிடைத்தன!

## அதுவரைக்கும்...!

இருபதாம் நூற்றாண்டின்
இருண்ட காலம்
இன்னும் முடியவில்லை!

அது இன்று...
சுதந்திர நாடுகளில்
அடிமைகளை உருவாக்கும்
சுகம்(?) ஒன்றை வளர்க்கிறது!

பனித்துளியை அழிப்பதற்கு
ஜீவநதிகள் எல்லாம்
படையெடுத்து வருவதில்லை!
ஆனால் இங்கே...
சிறுபான்மை மக்கள் வாழ்வைப்
பெரும்பான்மைக் கூட்டம்
அழிக்க வருகிறது!

நிறத்தைப் பிறப்பை
மொழிகளை வைத்து—வெறும்
நிழல்யுத்தம் நடக்கிறது—ஒரு
நீண்ட வரலாறு
நெருப்பில் எரிகிறது

பச்சைப் புல்வெளிகள் எங்கும்
மழைத் துளிகள் விழும்முன்பே
அணுகுண்டு வீச்சு!
கடல் வெளிகள் மீது
கப்பலிலே தூண்டில் போட்டு

“தேச மீன்கள்” பிடித்து
ராணுவ தளம் சமைக்கத்
திரியும் ஏகாதிபத்தியங்கள்!

புஷ்பங்கள் சாம்பலாக...
குடிசைகளின் புன்னகையில்
மலரும் போதே உதிரும்
ஒரு கோடி வசந்தங்கள்!

பீரங்கிப் புயல் வீச்சில்
பிணமாகிச் சாயும்
மனித வனங்கள்!
சமாதான மழைக்குத்
தவிக்கும் இதய வயல்கள்!

தென் ஆப்பிரிக்காவின்
உருகும் பனிநதி மேல்
துடுப்புகளால்
உடைக்கப்படும்
கறுப்புப் படகுகள்!

இப்போது...
வியத்நாமில் “சமாதான
ஒப்பந்தம்!”
இலங்கையிலே “தீப்பந்தம்!”
ஏகாதிபத்தியத்தின்
இரட்டை வேஷம்!

தேயிலைப் பூக்களுக்கு
இனவெறி என்னும்
மலேரியாவில் உரமாகும்
இந்தியத் தமிழர்கள்!

யாழ்ப்பாணம்
அசோகவனம் ஆகிறது!
இலங்கைக்கு
இராவணனே தீ மூட்டுகின்றான்!

இந்தியாவில்...
"ராமராஜ்யம்" என்றேனும்
வரட்டும்!
எங்களுக்கு இப்போதே
"ராமபாணம்" வேண்டும்!

அனைவருமே மனிதர் என்னும்
சமநீதி தழைக்கட்டும்!
அதுவரைக்கும்...
ஐக்கிய நாட்டுக் கொடி
அரைக் கம்பத்திலேயே
பறக்கட்டும்!

## கவிஞர். நா. காமராசன்

இன்றைய புதுக் கவிதை உலகுக்கு ஒரு புதிய பரிமாணத்தை அளித்திருக்கிற பெருமை கவிஞர். நா. காமராசனைச் சாரும். இவரது 'கறுப்பு மலர்கள்' இந்த நூற்றுண்டின் ஒரு நல்ல கவிஞரின் முகிழ்ச்சிக்கு கட்டியங் கூறிய கவிதைகள். 1965-லிருந்து எழுதுகிருர். இவரது எழுத்துக்களுக்கு வயது சொல்ல முடியாத முதிர்ச்சியும், தற்காலமும் சமூகமும் கொண்டிருக்கிற Perception-களுக்கும் மீறிய ஒரு Utopia-வின் கதவுகளைத் தட்டுகிற உயர மும் கிடைத்திருக்கிறது. கல்லூரி பேராசிரியர் உத்யோகமும் தமிழக அரசின் நல்ல பதவியுங் கூட சிறைப்படுத்திட இயலாத கவிக்குயில் இவர்.

— நர்மதா